ஈரோடு தமிழன்பன்

# மழை மொக்குகள்

## — யோரன்குறள்

## Rain Buds – Yoran Kural



English Translation:
**Prof. S.A.Sankaranarayanan**



# மழை மொக்குகள்
## யோரன் குறள்

# Rain Buds
## Yoran Kural

**ஈரோடு தமிழன்பன்**
**Erode Tamilanban**

English Translation:
**Prof. S.A.Sankaranarayanan**

**பாப்லோ - பாரதி பதிப்பகம்**
95, இரண்டாம் முதன்மைச் சாலை
போரூர்த் தோட்டம் 2ஆம் கட்டம்
சென்னை - 600 095

# மழை மொக்குகள்

ஆக்கியவர்
ஈரோடு தமிழன்பன்

ஆங்கிலவாக்கம்
பேராசிரியர் எஸ்.ஏ.சங்கரநாராயணன்

பதிப்பாசிரியர்
பேராசிரியர் வ.ஜெயதேவன்

பக்கங்கள் : 120

முதற்பதிப்பு : 2013

கலை
மாரி ஆனந்த்

அச்சமைப்பு
சா.ஐசக்

ஆக்கம்
'விழிகள்' தி.நடராசன்
பாரதி அச்சகம், சென்னை

வெளியீடு
பாப்லோ - பாரதி பதிப்பகம்
சென்னை - 95

**விலை ரூ: 80**

# கிலுகிலுப்பையும் கிறுகிறுப்பும்

எங்கள் முதற்பெயரன் கவின்தங்கத்தின் மூன்றாவது பிறந்தநாள் விழா வெளியீடாக வந்த கவின்குறுநூறு, எதிர்பாராத அளவில் கவிதை உலகின் செல்லப்பிள்ளையாகிக் கன்னம் சிவக்க முத்தங்களை இன்னும் பெற்றுக்கொண்டே இருக்கிறது. குழந்தை மூலமாகத்தான் பிரபஞ்சம் என்னும் பேரியற்கை இடையறாது தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது. எந்த ஒரு வைகறையும் அந்தியும் குழந்தைகள் முகம் பார்ப்பதில் சலிப்படைவதில்லை. சாளரங்களைத் தொடவருகிற நிலா மழலையின் முகம் கண்ணில் தட்டுப்படாதா என்றுதான் தவிக்கிறது. காலம்தோறும் கவிதைகள் பிறக்கக் காரணம் காலம்தோறும் குழந்தைகள் பிறப்பதுதான்.

குழந்தைகளிடையே பழகவும் கொண்டாட்டம் போடவும் துயரங்களை மறக்கவும் என்னைவிட என் கவிதைகளுக்கு வேட்கை அதிகம்... பழுப்பு நிறம் என் வயதுக்குள் தலைகாட்டினாலும் எனது வாழ்க்கை அரும்புகளோடும் தளிர்களோடும் விளையாடி ஓயவில்லயே! அக்கரைக்கு அழைத்துப் போகக் காத்திருக்கும் அந்திப் படகில் பயணமாகும் போதும், கரையிலிருந்து பச்சிளங்குழந்தைகளும் அவர்கள் பாடல்களும் எனக்கு மரணம் புரியாப் பேதமைத் துயரோடு விடை கொடுக்கும்.

என் இளையமகன் பாரதிதாசனுக்கும் அவன் மனைவி லிசாவுக்கும் மகனாக, எங்கள் பேரனாகப் புன்னகைக்கும் யோரன்வேல்செகதீசன் முதற்பிறந்தநாள் விழாச் சிறப்பு வெளியீடாக முகம் மலர்கிறது இந்நூல். இப்பெயரன் பிறந்தநாள் 12.12.2012. தமிழ் அமெரிக்கக் கலப்பில் கனிந்து கைக்கு வந்த செல்வம் ஜோரன் என்னும் யோரன். ஏறத்தாழ ஒன்றரைத்திங்கள் அமெரிக்காவில் மின்னியாப்பொலிசில் அவனோடு தேனில் நனைந்தபொழுதுகள் எனக்கும் என் மனைவி சாந்தகுமாரிக்கும் சிறகடித்துப் பறந்தன. அவன் சித்திர அசைவுகள், சிரிக்கும் கண்கள், மின்னும் உதடுகள், பொன் மேனிப் பொலிவுகள் எல்லாமே இன்பம் தந்தன, எம் இளமையை மீட்டுக்கொடுத்தன, தொட்டோம் தூக்கினோம், கொஞ்சினோம் கூத்தாடினோம். அவனோடு ஊர்சுற்றினோம், உலகம் பார்த்தோம், உவகைக் கடலின் உள்ளே விழுந்தோம்.

எங்கள் கண்மணி கவின் தங்கத்தின் தம்பி தங்கக் கம்பி அல்லவா!

இவ்வாண்டு என் பிறந்தநாளை நானோ என் மனைவியோ கனவுகூடக் கண்டிராத வண்ணம் எங்கள் மகன் பாரதிதாசன் அமெரிக்காவில் கொண்டாட ஏற்பாடுகள் செய்தான். எங்கள் பெயரன் யோரன் முதற்பிறந்தநாள் விழா மகிழ்ச்சியில் திளைக்கத்தான் எங்களுக்கு வேணவா. ஆனால் ஊர் திரும்பும் சூழல்; அது மட்டுமன்றித் திசம்பர்க் குளிரை நினைத்தால் உடம்பின் திசுக்கள் எல்லாம் நடுங்குகின்றன, இங்குத் தான் இருக்க இயலாதெனினும் தங்கக் கவினுக்கு எழுதியது போல் யோரனுக்கும் ஒரு நூல் எழுதலாமே என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. விளைவு - யோரன் குறள்.

குறள்வெண்பா யாப்பில் இதை எழுத எனக்கு எண்ணம் ஏன் தோன்றியதோ தெரியவில்லை. வாக்கியவிரிவுகளை வரவேற்காத அதன் சிற்றடிக் கூடத்தில் நடப்பதே அரிது. அப்புறம் குழந்தையோடு சேர்ந்து ஆடுவது பாடுவது கொண்டாட்டம் போடுவதெல்லாம் எப்படி?

ஆனால் எழுதத் தொடங்கியதும், யோரன் கொண்டாட்டத்தில் கலந்துகொள்ள வெண்டளைகள் ஓடோடி வந்தன; ஒவ்வொரு பா முடியும்போதும் காசு பிறப்பு நாள் மலர்கள் எல்லாம் கைகளில் பூக்களை அள்ளித்தூவின. தாராளமயமாகிவிட்ட செப்பலோசை யோரனையும் என்னையும் தழுவிக் கொண்டது.

இப்பாக்களில் சிலவற்றைத் தாளில் எழுதிக் கணினியில் பதித்தேன்.. பலவற்றை நேராகக் கணினியிலேயே எழுதினேன். நானாக நிறுத்திக் கொண்டேன் குறட்பெருக்கத்தை. உடனே அச்சிட வேண்டுமே! உரியநாளில் நூல் வெளிவரவேண்டுமே!

அமெரிக்காவிலிருந்து நான் அனுப்பிய பகுதிகளைப் பார்வையிட்டவர், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் இப்போது பேராசிரியராகப் பணியாற்றும் யமணிகண்டன் யாப்பியல் ஆய்வில் சிறப்பிடம் பெற்று விளங்கும் என் மனக்கினிய மாணாக்கராகிய இவர் இந்நூலுக்கு ஆய்வுரை வரைந்துள்ளார். என் பாராட்டும் வாழ்த்தும் இவருக்கு உரியன.

பேராசிரியர் ய. மணிகண்டன் அவர்களுடைய பார்வையில் வளரும் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் முனைவர்பட்ட ஆய்வாளர் செல்வி ம.அ. மணிமேகலை அவர்கள் இந்நூலின் பாடல் முதற்குறிப்பு முதலிய உருவாக்கங்களில் சிறப்பான நிலையில் செயல்பட்டுள்ளார். யமணிகண்டனிடத்தில் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்தும் செல்வி க. சசி அவர்களும் இப்பணியில் துணைநின்றுள்ளார். என் நேயம் நிறைந்த வாழ்த்துக்கள் இவர்களுக்கு.

என் மனம்கவர் தூரிகையாளர் மாரி.ஆனந்த் அவர்களின் வித்தக விரல்கள் ஓவிய முத்தங்களால் இச்சிறு பனுவலை அழகுபடுத்தியுள்ளன. அத்திறன்மிகு விரல்கள் விருதுகள் சூடி மகிழ வாழ்த்துகிறேன்.

என் கவிதைகளை ஆங்கிலப்படுத்தி ஓர் இணைப்படைப்பாளர் போல் என்னோடு கலந்திருக்கும் பேராசிரியர் சங்கர நாராயணன் ஆங்கிலம், சமற்கிருதம், தமிழ் மொழிகளில் வல்லமை படைத்தவர்.

இலக்கியம், மெய்யியல், மொழியியல் திறன்களும் பெற்றவர். இவருக்கு நானும் தமிழன்னையும் சேர்ந்து நன்றி சொல்வோம்.

அகராதியியல் துறையில் இந்திய அளவிலும் ஆசிய அளவிலும் தமக்கென ஓரிடம் பெற்ற தகுதியாளர் பேராசிரியர் வ.செயதேவன். என் வளர்ச்சியில் வற்றாத ஆர்வம் காட்டுபவர். இவருடைய கவனப் பார்வையைப் பெற்ற பெருமையோடு வெளிவருகிறது யோரன்குறள். ஏழுசீர்களால் அல்ல, எழுபதாயிரம் சீர்களால் இவருக்கு நன்றி.

வழக்கம் போல் விழிகள் தி. நடராசன் வியர்வை ஈரம் இந்நூலிலும் படிந்து மணக்கிறது. ஒப்படைப்பு உணர்வோடு ஒன்றைச் செய்து முடிக்கும் உள்ளமும் உழைப்பும் இவருடைய முகவரி. உண்மை மனிதர்; ஒழுக்கப் பிழம்பு நடராசன். இவருக்கு வாஞ்சை மிக்க என் வாழ்த்துக்கள்.

இனி என்ன? யோரனோடும் குறள் வெண்பாவோடும் ஒரு கவிதைத் திருவிழா. அனைவரும் கலந்துகொள்ளலாம். கையில் சொல்லுடன் வந்தால் கவிதைகளுடன் திரும்பலாம். பூவுடன் வந்தால் புன்னகையுடன் புறப்படலாம். ஏதும் இல்லாமல் வந்தால்கூட விருப்பமான ஏழு சீர்களைப் பெற்றுக்கொண்டு போகலாம். வாசலில் வரவேற்கவும் வழி அனுப்பவும் யோரன், கவின் மற்றும் நான்.

**தமிழன்பன்**

தொலைபேசி: 044 28449537

# சென்னைப் பல்கலைக்கழகம்
## தமிழ் இலக்கியத்துறை

**முனைவர் ய.மணிகண்டன்**
**உதவிப் பேராசிரியர்**

பரிதிமாற்கலைஞர் வளாகம்
சென்னை - 600 005

# ஈரமும் சாரமும்

வள்ளுவப் பெரியோனின் ஒப்பில் படைப்பாம் வள்ளுவம் குறித்துப் புதுக்கவிதையில் ஒப்பில் இலக்கியம் படைத்தவர் நம்காலத் தமிழ்க் கவிதையுலகின் தலைமைக்கவி ஈரோடு தமிழன்பன். வள்ளுவத்தைக் குறித்துப் புதுக்கவிதையில் இலக்கியம் படைத்த கவிஞர்பெருந்தகை இப்பொழுது வள்ளுவ யாப்பில் மணக்கும் தமிழில் மரபுக் கவிதை இலக்கியம் படைத்திருக்கின்றார். வள்ளுவர் போற்றிய 'குழலையும் யாழையும் வெல்லும் சொல்லின் மழலைப் பருவம்' படைப்பின் மையப் பொருளாக "மழை மொக்குகள்" என்னும் தலைப்பில் நூல் மலர்ந்திருக்கின்றது.

'வணக்கம் வள்ளுவ' நூலிலே வள்ளுவ யாப்பாம் குறள்வெண்பாவைக் குறித்து ஈரோடு தமிழன்பன் எழுதிய எழுத்துகள், சிந்தித்த கருத்துகள் இதுவரை தமிழ் வரலாற்றில் எவரும் சிந்திக்காதவை. முதுபெரும் தமிழ்த் திறனாய்வாளர் கா.சிவத்தம்பி இதனை மனங்கொண்டே அப்பகுதியைத் "தமிழின் யாப்பு மரபு நன்கு புரிந்த ஒரு தமிழாசிரியனின் மிக்க வசீகரமுள்ள கற்பனையாகும்" என்று விதந்து பேசியிருப்பார். ஈரோடு தமிழன்பனின் படைப்பு வரலாற்றிலே கவிதை, கட்டுரை, ஆராய்ச்சி, புனைகதை எனப் பன்முகப் பரிமாணங்கள் உண்டு. கவிதைப் பரிமாணத்துள் மரபுக் கவிதை, வசன கவிதை, புதுக்கவிதை, கவியரங்கக் கவிதை, ஐக்கூ கவிதை, சென்ரியு கவிதை, லிமரைக்கூ கவிதை எனப் பல பக்கங்கள் உண்டு. மரபுக் கவிதையின் வளத்தையும் வீச்சையும் புதுக்கவிதைக்குள் பாய்ச்சிய பெருங்கவிஞர் அவர். மரபுக் கவிதையின் எண்ணற்ற வடிவங்களில் கவிதைகள் படைத்த அவர் வெண்பா யாப்பில் தனித்த படைப்புகளை வார்ப்பதில் இதற்குமுன் கடைக்கண் செலுத்தவில்லை. அதேபோழ்தில் அவருடைய ஐக்கூ படைப்புகளில்கூட

ஈற்று வரிகள், வெண்டளை நிரம்பிய வெண்பாவின் ஈற்றடிகளாக விளங்கியிருக்கின்றன. மரபின் உச்சங்களைத் தொட்ட அந்த மகத்தான கவிஞரின் புதுக்கவிதைகளிலும் ஐக்கூ கவிதைகளிலும் கூட வெண்பாவின் ஈற்றடி அமைப்புகளைத் தரிசிக்க முடிகின்றதென்றால், வெண்பா யாப்புமனம் அவருக்குள் நீறுபூத்த நெருப்பாக வேர்விட்டு விளங்கிக் கொண்டிருக்கின்றது என்பதையே அது உணர்த்துகின்றது எனல் வேண்டும்.

கால்நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு மாபெரும் தமிழ்ப் பேராசிரியராக, ஒரு தனித்தன்மைமிகு தமிழறிஞராக முகங்காட்டிய வண்ணம் புதுக்கல்லூரியின் முதுகலைத் தமிழ் வகுப்புக்குள் நுழைந்த அவர், எங்களுக்கெல்லாம் தொல்காப்பியக் குறுவெண்பாட்டின் இலக்கணங்களைப் பயிற்றிய கோல நினைவுகள் இந்த நூலுக்குள் நுழைகையில் நெஞ்சில் குமிழ்விடுகின்றன.

குறுவெண்பாட்டு என்னும் குறள்வெண்பாவை எண்ணற்ற மாணவர்களுக்குக் கற்பித்த பேராசான், தமிழின் தலைசிறந்த முனைவர்பட்ட ஆய்வுகளுள் ஒன்றான தனிப்பாடல் திரட்டு குறித்த ஆய்விற்காகக் குறுவெண்பாட்டு வடிவங்களை ஆராய்ந்த ஆய்வறிஞர், குறுவெண்பாட்டு வடிவத்தைக் குறித்து அற்புதமாகக் கவிதை படைத்த தமிழின் ஒருபெருங்கவிஞர் முதன்முறையாகக் குறள்வெண்பா யாப்பில் ஒப்பற்ற கவிதைப்படைப்பை ஆக்கியிருக்கின்றார்.

கவிஞர் ஈரோடு தமிழன்பன் அவர்களுக்கு இரு புதல்வர்கள்; இரு புதல்வர்களுக்கும் இரு புதல்வர்கள். இரு பேரக் குழந்தைகள் பெயரிலும் எழிலார்ந்த இரு படைப்புகள். முதற்பேரன் பெயரில் வெளிவந்த 'கவின்குறு நூறு' என்னும் படைப்பு ஒரு வகையில் குழந்தைமை குறித்த ஒரு முன்னோடிப் படைப்பாகும். புதுக்கவிதையில் அமைந்த அந்தப் படைப்பு தமிழ்க் கவிதையுலகில் புதிய முகடுகளில் ஒளியேற்றி வைத்தது. இரண்டாம் பேரன் பெயரையும் அன்பையும் சுமந்தவண்ணம் சுடரும் இந்தப் படைப்பு, பிறிதொரு வகையில் குறள்வெண்பா யாப்பிலான நூல்களின் வரலாற்றில் புதிய சிகரத்தைத் தொடுகின்றது.

தமிழ் யாப்பு வரலாற்றிலே தமிழின் தலைசிறந்த இலக்கியமே குறள்வெண்பா யாப்பில் அமைந்ததுதான். தெய்வப்புலவரின் திருக்குறள் யாப்புநிலையிலும் முன்னோடிப் படைப்பே. குறள்வெண்பா யாப்பில் எண்ணற்ற படைப்புகள் எழுந்திருக்கின்றன. எழுதத் தெரிந்த அனைவரும் புதுக்கவிதை எழுதுகின்றனர் எனச் சொல்லும் அளவிற்குப் புதுக்கவிதையை மலினப்படுத்தியது போலவே, தேமா புளிமா தெரிந்தவர்களெல்லாம் குறட்பா வடிவில் நூல்கள் படைக்கின்றனர் என்னும் நிலைக்கு அந்த யாப்பை மலிவாக்கிய வரலாறும் தமிழில் உண்டு என்றபோதிலும் குறள்வெண்பா யாப்பிற்கு வளம்சேர்த்த

அருங்கவிஞர்களும் அன்னைத்தமிழில் பலர் உண்டு. உமாபதிசிவாச்சாரியார், ஔவையார், மறைஞானசம்பந்தர், திரு.வி.க., தமிழ்ஒளி, வ.சுப. மாணிக்கனார், இரா. இளவரசு என நீளும் நிரலில் இடம்பெறுவோர் குறள்வெண்பாவை நேர்த்தியுற வடித்த விரல்களுக்குச் சொந்தக்காரர்கள். இந்தப் படைப்பாளிகளின் நிரலில் தனித்தன்மையோடு இப்பொழுது இணைகின்ற பெயர் நம் கவிஞர்பெருந்தகையின் பெயர். இப்பொழுதுதான் இந்நிரலில் இப்பெயர் இணைகின்றது என்றபோதிலும் வள்ளுவப் பெருந்தகையின் திருப்பெயரை அடுத்து இடம்பெறும் அரும்பெயர்களுள் குறிப்பிடத்தக்கதாய் இப்பெயர் அமைந்துவிடுகின்றது. திருவள்ளுவருக்குப் பிந்தைய வரலாற்றிலே ஒரு மாபெரும் கவிஞர் குறள்வெண்பா யாப்பில் இலக்கியம் படைத்த முயற்சியாக இப்படைப்புமுயற்சி நிகழ்ந்திருக்கின்றது. ஆதலினால் வள்ளுவருக்குப் பிந்தைய வரலாற்றில், குறள்வெண்பா யாப்பிலான நூல்களின் உலகத்தில் ஈரோடு தமிழன்பனின் இடம் தனித்தொளிரும் தகைமைகொண்டு திகழ்கின்றது.

* * *

தமிழில் பொருண்மை சார்ந்தும், வடிவம் சார்ந்தும், உத்தி சார்ந்தும் என இலக்கியவகைகள் பல எழுந்திருக்கின்றன. அவற்றுள் இங்குக் குறிக்கத்தக்கதாய் அமைவது குழந்தையை மையமிட்டு அமையும் கவிதையிலக்கிய வகையாகும். மரபாகப் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகை வழங்கிவருகின்ற போதிலும் அது குழந்தைகளின் உலகத்தை மையமிட்டுத் தோன்றியதன்று. குழந்தையை மையமிட்டுத் தோன்றும் இலக்கியவகையிலும் இருநிலைகள் உண்டு. ஒன்று குழந்தைப் பாடல்கள் என்னும் நிலையில் அமைவது. பிறிதொன்று குழந்தைமைப் பருவத்தை விதந்து கொண்டாடுவதாக அமைவது. குழந்தைப் பாடல்கள், குழந்தைகள் பாடி மகிழும் நிலையிலும், படித்து மகிழும் நிலையிலும், பாடல் வடிவில் கதைகளை வழங்கும் நிலையிலும் விளங்குகின்றன. இந்த நிலையிலான இலக்கியவகைக்கான வரலாறு நெடியதாய் நிலவவில்லை. மிகப் பிற்காலத்திலிருந்துதான் பதிவுகள் காட்சிதருகின்றன. குழந்தைமையைக் கொண்டாடல் என்னும் நிலையிலான படைப்புகளை அருகிய நிலையில் எனினும் சங்கப் பாடல்கள், திருக்குறள் எனத் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஆங்காங்குக் காணமுடிகிறது. குழந்தைப்பாடல் இலக்கியமோ இருபதாம் நூற்றாண்டில் பெருவளம் பெற்றுள்ளது. குழந்தைமையைக் கொண்டாடல் என்னும் நிலையிலான இலக்கியவகை நிலையோ பெருவரலாறு கொண்டபோதிலும் பெருவளம் கொள்ளவில்லை. இத்தகைய நிலைகளில் ஈரோடு தமிழன்பனார் குடை ராட்டினம் என்னும் தலைப்பில் முன்னமே குழந்தைப்பாடல் இலக்கியம் படைத்தவர்.

அப்பெருந்தகை இப்பொழுது, சிறிதுகாலம் முன் புதுக்கவிதையில் குழந்தைமையைக் கொண்டாடும் இலக்கியத்தைப் படைத்ததன் தொடர்ச்சியாகக் குறள்வெண்பா யாப்பில் இவ்விலக்கியத்தைப் படைத்திருக்கின்றார்.

".. .. .. இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்கள்"

குறித்த புறநானூற்றுச் சித்திரத்தை வரைந்த பாண்டியன் அறிவுடைநம்பியின் சங்கத் தமிழ் மரபில்,

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்."

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றுஅவர்
சொல்கேட்டல் இன்பம் செவிக்கு."

என் மக்கட்பேற்றைக் கவித்துவச் சிற்பமாக்கிய வள்ளுவனின் மரபில்,

"கிடக்கில் தொட்டில் கிழிய வுதைத்திடும்,
எடுத்துக் கொள்ளில் மருங்கை யிறுத்திடும்,
ஒடுக்கிப் புல்கி லுதரத்தே பாய்ந்திடும்"

கண்ணக் குழந்தையை,

"பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே"

எனக் காண அழைத்த பெரியாழ்வாரின் பிள்ளைத்தமிழ் மரபில்,

"கண்ணே! மணியே! முத்தந் தா,
கட்டிக் கரும்பே! முத்தந் தா;
வண்ணக் கிளியே! முத்தந் தா
வாசக் கொழுந்தே! முத்தந் தா"

எனக் குழந்தையை, குழந்தைமையைக் கொண்டாடிய கவிமணி தேசிக விநாயகத்தின் மரபில் கவிஞர் ஈரோடு தமிழன்பன் மக்கட்பேற்றின் மக்கட்பேற்றை, ஆம் பேரர் பேற்றைக் குறள்வெண்பாவில் கொண்டாடி மகிழுகின்ற காட்சியை - மாட்சியை - தமிழுலகமே கண்ணுறச் செய்கின்றது இந்தப் பனுவல்.

* * *

ஈரோட்டுக் கவி 'கை புனைந்தியற்றிய கவின் பெறு வனப்பா'ம் 'யோரன் குறள்' நுதல்பொருளால், நுவல்முறையால், நடையால்,

தொனியால் பல்வண்ணக் கோலங்கள் காட்டுகின்றன. புலமைத் தவிசேறிப் பொலிபவை சில; செறிந்த நடையால் திகழ்வன சில; எளிமை நலத்தால் இயல்பவை சில; தத்துவ வித்தகம் காட்டுவன சில; விளையாட்டுப் போக்கில் விளைந்தவை சில; வேடிக்கையாய் அரும்பியவை சில; கற்பனை கமழ்பவை சில; உவமை ஒளிர்பவை சில; செய்தி நிரலாய்த் தென்படுவன சில; ஓசை உன்னத உருவின சில; தன்மையாய் முன்னிலையாய்ப் படர்க்கையாய் நின்று பாடுபொருளை முன்வைப்பன சில; அரும்பின் குறும்புகளை அரங்கேற்றுவன சில; இயற்கையை ஆராதிப்பவை சில; இயற்கையாய் மனிதன் இல்லையே என்று பெருமூச்செறிவன சில; சொந்தப் பேரனை வந்திப்பன சில; உலகப் பேரர்கள் அனைவரையுமே ஒட்டு மொத்தமாய்ச் சொந்தம் கொண்டாடித் தழுவிக் கொள்வன சில; அறவுரை அறைவன சில; அன்புரை சொல்வன சில; அழகுரை அணிந்தவை சில - என இத்தொகுதியின் வெண்பாக்கள் இலக்கிய மாட்சியிலும் இதயங்கவர் ஆட்சியிலும் சில சில நிலைகளைக் கடந்து பலவாகிய மேன்மைவானில் பளிச்சிட்டுச் சிறக்கின்றன.

* * *

வள்ளுவப் பேரனாம் தமிழன்பப் பாட்டனுக்குதான் தம் பேரன் யோரன் மீது எத்துணை அன்பு? எத்துணை பாசம்? எத்துணை நேசம்? எத்துணை வற்றாத வாஞ்சை? உலகின் அத்தனை தாத்தாக்களும் அங்காந்திட, பொறாமைகொள்ள எப்படியெப்படியெல்லாம் தம் பேரனை எண்ணி மகிழுகின்றார்? ஏத்தி மகிழுகின்றார். தமிழன்பக் கவியின் தனயன் பாரதிதாசன் மணந்து கொண்ட செழுங்குணச் செல்வி லிசா அமெரிக்க மண்ணின் அருமைப் புதல்வி. எனவே தமிழத் தந்தையும் அமெரிக்கத் தாயும் ஈன்று புறந்தந்த இன்னெழிற் குழவியை வள்ளுவ வம்சமாய் விட்மனின் வாரிசாய்க் கொண்டாடி மகிழுகின்றார் தமிழன்பக் கவி. ஐன்ஸ்டீனின் இன்றைய பிறப்பென்று எழுதி மகிழ்கின்றார். பொருள் புரியா நிலையில் அக்குழவி பேசும் மழலையை ஆப்ரகாம்லிங்கனின் வரலாற்றுச் சிறப்புமிக்க சொற்பொழிவோடு இணைத்துச் சொல்லி இன்புறுகின்றார். உலகத்தமிழறிஞராம் ஜார்ஜ் எல். ஹார்ட் ஆரவாரம் செய்து அகமகிழும் வண்ணம் பேரனின் செய்கை விளங்குதல் கருதிக் களிகொள்கின்றார். தாயையே தன் தமிழ்ப்பயிற்சியால் தமிழ் பேச வைத்துவிடுவான் என்று எண்ணங்கொள்கின்றார். அமெரிக்க மண்ணில் வாழ்ந்தாலும் உறவின் வேரால் ஒளிமிகுந்த தமிழனாய் அவன் ஒளிர்வான் என்று நம்பிக்கையோடு உவக்கின்றார். அச்சிறு குழவி திருவள்ளுவனில் திளைத்தும் இளங்கோவில் இயைந்தும் கம்பனில் கனிந்தும் புகழேந்தியில் பொருந்தியும் பொலிய வேண்டும் என்று ஆசைவயப்பட்டுக்

கவியோவியங்கள் தீட்டி மகிழ்கின்றார். அவன் குறும்புகளை எண்ணி, அவன் இதழசைவிலிருந்து பிறப்பெடுத்துவரும் சொற் சிதறல்களில் நனைந்து, அவன் பொன்னுடல் அசைவுகளிலிருந்து புறப்பட்டுவரும் ஒயிலை நினைந்து பாலமுரளி கிருஷ்ணாவையும் பத்மா சுப்ரமணியத்தையும் யோரனோடு பிணைத்தெண்ணிப் பெருமகிழ்வு எய்துகின்றார். முற்றா இளங்குழவியின் சிறுகை சிறுகால் அசைவுகளை, குழவித் திருவிளையாடல்களை முகமது அலியின் குத்துச்சண்டை வீச்சுகளோடும், தமிழ்த்திரையுலகின் இளங்கதாநாயகர்கள் விஜய், விஷால், தனுஷ் முதலியோரின் திரைப்படச் செயல்களோடும் ஒப்பிட்டு உரைத்து ஆர்க்கின்றார். யோரனே இப்படைப்பின் கதாநாயகனாகக் காட்சிதருவதனை, 'யோரன் கதாநாயகன்; யோரன் போலுள்ள பருவத்தார் அனைவரும் கதாநாயகர்கள்' எனப் புகன்று பூரிக்கின்றார். குழந்தைமையைக் கொண்டாடும் இலக்கியங்களின் உலகத்தில் இந்நூல் சொல்லால் பொருளால் நடையால் யாப்பால் தனிநிலையினது எனத் தகுதிபாராட்டும் வண்ணம் மெருகுற்ற படைப்பாய் மிளிர்கின்றது; மிளிரச் செய்திருக்கின்றார் மின்னும் தமிழால் கவிஞர் பெருந்தகை ஈரோடு தமிழன்பனார்.

* * *

அமெரிக்க மண்கொண்டும் அமெரிக்கப் பெண் கொண்டும் வாழுகின்ற ஈரோடு தமிழன்பனாரின் திருமகன் மருத்துவக் கல்வியிலும் ஆராய்ச்சியிலும் வல்லுநராக வளர்ந்து அங்கே வாழ்வாங்கு வாழ்வதனைப் பூங்குன்றன் போனவழி உன்தந்தை தேர்ந்தவழி என்று குறிக்கின்றார் கவிஞர். மைந்தனின் இல்லற நல்லறத்தின் பேறாய் வாய்த்த பேரனைத் தமிழகமும் அமெரிக்கமும் இணைந்த ஒரு விசால விளைவாக எண்ணியெண்ணி மகிழுகின்றார். வையைத் திருநதியும் அமெரிக்காவிலே ஓடுகின்ற மிசிசிபி நதியும் ஒன்றிணைந்த பிரவாகமாகப் பிள்ளைக்கனியமுதைக் கருதிக் களிகூர்கின்றார் இப்படி:

வைகை ஒருகண் மறுகண் மிசிசிபி
பொய்யாத் தமிழ்ப்புனல்யோ ரன்.

அம்மழலைச் செல்வத்தால் ஊற்றெடுக்கும் மகிழ்ச்சியை உலகக் குழந்தைகள் அனைத்தாலும் பெருக்கெடுக்கும் மகிழ்ச்சியாகக் கொள்கின்றார் கவிஞர். அந்த மகிழ்ச்சியிலே தன்னை மறந்து தன் நாமம் கெட்டுத் தலைப்பட்டுவிடுகின்றார் யோரனின் உலகத்தில்! அந்தச் சொல்லவொண்ணா இன்பக் கிளர்ச்சியை இப்படிச் சொல்லில் வடிக்கின்றார்:

உன்னுள் உலகக் குழந்தைகள் உல்லாசம்
என்னுள்ளே இல்லையடா நான்.

குழந்தைகண்டு உவந்த அவர் அந்தக் குழந்தை உவக்க வழிகாட்டுகின்றார். எப்படி? இயற்கையின் உன்னதங்களில் திளைப்பதன் வாயிலாக உவகை உலகின் கதவுகள் உடனே திறக்கும் என்பதை,

நிலாவைப்பார்! வானம்பார்! நித்திலமீன் கள்பார்!
உலாப்பார் உனக்குள் உவப்பு.

பூக்களைப்பார்! வண்டுகள்பார்! பொட்டுப் பனித்துளிபார்!
தேக்கிப்பார் எல்லாம் திளைத்து

என்று உணர்த்துகின்றார். ஓரகவை முற்றாத சிறுகுழவிக்கு இந்த உணர்த்தல் கேட்கும்; இதனை அறிந்து இயற்கையில் திளைக்கும் என்றா இப்படிப் பாடியிருக்கின்றார். இல்லை இல்லை. பல பத்து அகவைகள் நிறைவுபெற்றும் இயற்கையில் ஒன்றி வாழ்வைச் செழிப்பாக்கிக் கொள்ளாத நம்மில் பலரைப் பார்த்துத்தான் பேரனுக்குச் சொல்வதுபோலச் சொல்லியிருக்கின்றார். தன்னில் ஒன்றாத இந்த மானுடர்கள் பற்றி இயற்கை கவலை கொள்கின்றதாம். மனிதர்கள் இயற்கையில் ஒன்றவில்லை என்பதல்ல அதன் கவலை. மனிதர்கள் இயற்கையாக இருப்பதில்லையே என்பதே அதன் கவலையாம். இதனை,

இயற்கையாய் ஏனில்லை இம்மனிதன் என்றே
இயற்கைக்குத் துன்ப இருப்பு.

எனப் பாடி இயற்கையாய் வாழ, இயற்கையோடு வாழ மனிதனுக்குக் கவிஞர் அறிவுறுத்துகின்றார்.

குழந்தையின் குறும்புலகத்தில் திளைத்து மகிழும் கவிஞர் - அந்தக் குதூகல உலகத்தை நினைத்து மகிழும் கவிஞர், கண்ணே மணியே முத்தந்தா என்ற கவிமணியின் மரபிலே வந்த கவிஞர், மழலையும் தானுமாகப் பரிமாறிக் கொள்ளும் முத்தங்கள் குறித்துக் கவித்துவம் கமழக் கமழ இப்படிப் பாடியிருக்கின்றார்:

அஞ்சுமுத்தம் ஆறுமுத்தம் என்ன கணக்கடா
பஞ்சுமிட் டாயா பசிக்கு?

கணக்கற்ற முத்தங்களே அன்புப்பசியை ஆற்றும் என்பதை மொழியும் கவிஞர், கைக்கு அகப்படும் புத்தகங்களைச் சிறுகுழந்தை வாய்க்குள் அகப்படுத்தும் செய்கையை இப்படி அழகிய ஓவியமாக்கியிருக்கின்றார்.

படிச்சுத்தான் சொல்லணுமா? ஏடுகளை யோரன்
கடிச்சுச்சொல் கின்றான் கருத்து.

அந்தச் செய்கை பேரன் புத்தகங்களை இப்பொழுதே படித்துக் கருத்துச் சொல்வதற்கான முயற்சியென்று அழகு ததும்பப் பாடியிருக்கின்றார். அம்மழலைச் செல்வத்தின் தொடுதல் உணர்ச்சியையும் விடுதல் உணர்ச்சியையும் அற்புதமான கவியோவியமாக ஆக்கியிருக்கின்றார்:

தொடும்போதில் என்உடம்பில் பூந்தோட்டம்! தொட்டு
விடும்போதில் பாலை வெதுப்பு.

பேரன் தொடும்பொழுது உடல் முழுதும் பூந்தோட்டமே பூத்து விடுகிறதாம். அந்தத் தொடுகை விடைபெற்றதும் உடம்பெங்கும் பாலைவனத்தின் வெப்பம் வாட்டுகிறதாம். அந்த உன்னத உணர்வைக் கவிதை உன்னதத்தில் கவிஞர் காட்சிப்படுத்தியிருக்கின்ற அழகு தெவிட்டாத அழகாகத் தித்திக்கின்றது.

இந்தக் குறள்வெண்பா இலக்கியம் மழலைச் செல்வத்தை மையமிட்டுத் தோன்றியிருப்பினும், ஒட்டுமொத்த மானுடத்தை மனங்கொண்டே நூற்பரப்பெல்லாம் ஈரோட்டுக் கவியின் குரல் ஏற்றமுற ஒலிக்க அமைந்துள்ளது; மானுடம் பெயரளவிலன்றிப் பொருளளவிலும் மானுடமாக விளங்க அறிவுறுத்துகின்றது.

எல்லார்க்கும் வாழ்க்கை எவருக்கும் வெற்றி! சின்ன
நெல்லளவா இந்த நிலம்?

பூக்கொய்தல் வாழ்க்கையடா! பூங்கா விரிந்ததடா!
தாக்கல் தகர்த்தல் தவறு.

வன்பொருள் மென்பொருள் கற்றலின் மானுட
நன்பொருளாய் வாழ்வதே நன்று.

இந்தக் குறள்வெண்பாக்கள் பரந்துபட்ட வையத்தில் பேதமும் பொறாமையுமின்றிப் பொருளே வாழ்வாய்க் கருதாது மானுடம் பொலிய முரசொலிக்கின்றன.

வாழ்வில், வையகத்தில் எண்ணற்ற இடர்கள், எண்ணற்ற துயரங்கள், எண்ணற்ற தோல்விகள் என்றாலும் நம்பிக்கையில்தானே வாழ்க்கை இருக்கின்றது; இயங்கிக்கொண்டிருக்கின்றது. அதனை முத்தாய்ப்பாக முன்வைக்கின்றது இந்தக் குறள்:

இன்னும் மலர்பூக்கும் இன்னும் கனிகுலுங்கும்
இன்னும் இருப்போம் இனிது.

இந்த நம்பிக்கை நோக்குத்தான் தமிழன்பக் கவியின் சாரம்; இந்த விழுப்பொருள்தான் மழைமொக்குகள் என்னும் இந்தப் படைப்பின் ஆழ்பொருள். இந்த நூலைப் பயிலும் நாமும் கொள்ளவேண்டிய கவிப்பொருள்.

* * *

வள்ளுவரைப் போற்றித் தொடங்குகின்ற இந்த நூல் வள்ளுவத்தைப் போற்றி நிறைவுபெறுகின்ற நேர்த்தி நூலின் பன்முக மாட்சிகளுள் ஒன்றாக உயர்வுற அமைந்து திகழ்கின்றது.

தெள்ளுகுறள் யாப்பில் தெளியா விளையாட்டு!
வள்ளுவரே! மன்னிப்பீ ரா?

எனத் தொடங்கும் நூல்,

திருக்குறள் கற்கத் திருக்குறள் கற்கத்
திருக்குறள் கற்கத் திரு.

என நிறைவுபெறுகின்றது. தம்மை வள்ளுவர் மன்னிப்பாரா? எனக் கேட்டுத் தம் படைப்பு முயற்சி 'தெளியா விளையாட்டு' என அவையடக்கத்தோடு கவிஞர் பெருந்தகை குறிக்கின்றார். நூலில் உள்ள குறட்பாக்களோ தமிழன்பனின் வெண்பா விளையாட்டு தெளியா விளையாட்டு அன்று; தேர்ந்து தெளிந்த திருவிளையாட்டு என்பதை உறுதிசெய்கின்றன. இந்த நூன்முயற்சி கண்டு வள்ளுவப் பெரியோன் "மன்னிப்பா? அந்தப் பேச்சுக்கே இடமில்லை" எனச் சொல்லி மார்புறத் தழுவிக் கவிஞரைப் பாராட்டும் காட்சி என் மனக்கண்ணில் தோன்றுகின்றது. நிறைவுக்குறளிலே "மும்மடங்கு பொலிந்தனன்" என்றாற்போல மும்முறை "திருக்குறள் கற்க" என்பதை அழுத்திச்சொல்லித் திருக்குறள் கற்றால் திரு திகழும் என்பதனை உணர்த்தும் அழகு ஒப்பிலா அழகாய் ஒளிர்கின்றது.

வள்ளுவ யாப்பில் மலர்ந்துள்ள இந்நூலின் மையப் பொருள் குழந்தைமையைக் கொண்டாடல் எனினும் நூல்நெடுக வள்ளுவத்தைக் கொண்டாடலும் பிறிதொரு மையப்பொருளாக விளங்குதல் மனங்கொள்ளத்தக்கதாக அமைகின்றது. வள்ளுவமும் தமிழன்பனின் சிந்தனையுலகமும் இரண்டறக் கலந்தவையல்லவா? பேரன் யோரனைச் சிந்திக்கும் பொழுது "வள்ளுவனின் வாரிசு நீ" என்று வாஞ்சையோடு சொல்லாடி மகிழ்கின்றார். "யாகாவாராயினும் நாகாக்க", "மாதர் முகம்போல்", "எல்லா விளக்கும்" என்னும் வள்ளுவரின் குறட்பாக்கள் பெயரனோடு தொடர்புபட்டு,

நாக்கில் இருக்குது நல்லதும் கெட்டதும்
காக்கத் தெரிந்துகொள்கண் ணே.

யோரன் விரல்நகம் போலொளிர வல்லையேல்
தேர்ந்தனை வாழி மதி.

எல்லா மலரும் மலரல்ல யோரன்வாய்ச்
சொல்லாம் மலரே மலர்.

என வனப்புற மறுவடிவம் எடுத்துள்ளன. வள்ளுவக் கொள்ளுப் பாட்டனின் வண்டமிழ்ச் சொற்களால் தமிழன்பனின் குறட்பாக்களில் பேரன் பேசப்பட்டிருக்கின்ற பெற்றி விதந்து பேசத்தக்கதாகப்

பிறங்குகின்றது. பேரனுக்குச் சொல்லுகின்றாரா, பேரனை வாய்ப்பாக வைத்துக்கொண்டு நமக்குச் சொல்லுகின்றாரா என எண்ணும் வண்ணம்

ஒருநாள் ஒருகுறள் யோரா படிநீ
திருநாளே எந்நாளும் தேர்.

திருவினுள் எல்லாம் திருவாம் குறளின்
கருவினுள் வாழக் கருது.

எனத் திருக்குறளைப் பயிலவும் அதைக்காட்டிலும் குறள்நெறியில் வாழவும் கருதுமாறு நமக்கெல்லாம் கவிஞர் அறிவுறுத்தும் பாங்கு அகந்தைக்கின்றது.

* * *

தமிழுலகின் முதுபெரும் கவிஞர், மற்றவர்கள் 'தள்ளாத வயது' எனச் சொல்லும் இந்த முதுமையில் தள்ளாத வயதைத் தள்ளி வைத்துவிட்டு ஆட்டம் போடுகின்றார். அந்த ஆட்டம் அவரே சொல்வதுபோலக் "குழந்தையோடு ஆட்டம் குறட்பாவோடு ஆட்டம்" ஆக அமைகின்றது. அந்த ஆட்டத்திலே அவரும் வெற்றிபெற்று விடுகின்றார்; யோரனும் வெற்றி பெற்றுவிடுகின்றான். நாம்தாம் அந்த ஆட்டத்தின் விறுவிறுப்பில் - அழகில் நம்மை இழந்து தோற்று விடுகின்றோம். குழந்தையோடு போடுகிற ஆட்டம் குறட்பாவோடு போடுகிற ஆட்டமாகவும் அமைந்துவிடுகிறது. ஆம் குழந்தையும் குறட்பாவும் ஒன்றுதானே. விசுவரூபத்தை - திரிவிக்ரமத்தை - அடக்கிக்கொண்டிருப்பதல்லவா வாமனம். குழந்தையும் குறட்பாவும் காட்டாதனவெல்லாம் காட்டும்; நாம் கண்டறியாதனவற்றையெல்லாம் கண்டறியச் செய்யும்; சுருங்கச் சொன்னால் இரண்டும் நம்மை நமக்கு உணர்த்தும். கவிஞர் போடுகின்ற இந்த ஆட்டத்தில் அவரிடமிருந்து முதுமை விடைபெற்றுச் சென்றுவிடுகிறதாம். விளைவென்ன? வயதுகள் மறைய யயாதியைப்போல இளமை பெற்றுவிடுகிறார் கவிஞர்.

ஓட முடியா வயதில்நான்; யோரன்பின்
ஓட முடிகிறதே! ஓ!

ஓடுகிறேன் நான்கவி னோடு வயதுகளும்
ஓடி மறைவதெங்கே ஓது.

மூத்த மகன் பாப்லோ நெருடாவின் செல்வன் கவினோடும், இளைய மகன் பாரதிதாசனின் செல்வன் யோரனோடும் போடும் ஆட்டத்தில் முதுமை விடைபெற, வயதுகள் மறையக் கவிஞர் இளைஞராகி விடுகின்றார். நாமும் இப்படி வாழும்போது நமக்கும் இவை வாய்க்கும் என்பதை இந்தக் குறள்களின் வாயிலாக உணர்த்திவிடுகின்றார்.

* * *

குறள் வெண்பாவின் செப்பலோசை நலத்தினை மூவகையாகப் பகுப்பது தமிழ் இலக்கண மரபு. எனினும் மூவகையுள் ஒன்றான ஏந்திசைச் செப்பலோசை கொண்டனவாகக் குறள்கள் மிக அருகியே தோன்றும். தூங்கிசைச் செப்பலோசை கொண்டனவாகச் சிலவே தோன்றும். ஒழுகிசைச் செப்பலோசை கொண்டனவாகவே குறட்பாக்கள் பெரிதும் அமையும். தெய்வப்புலவரின் திருநூலிலே 'யாதானும் நாடாமால்' என்னும் ஒரே ஒரு குறள்தான் ஏந்திசைச் செப்பலோசையில் அமைந்திருக்கின்றது. ஈரோடு தமிழன்பனின் இந்த நூலிலும் இப்போக்கு எதிரொலிக்கக் காண்கின்றோம்.

*தாவரங்கள் மாவரங்கள் தாம்நினைத்தால் பூவுலகே*
*சாவரங்கம்! சந்தேக மா?*

என வெண்சீர்களாலேயே அமைந்து ஏந்திசைச் செப்பலோசை நலம்சிறக்கவும்,

*கதவை இருட்டா திறக்கும்? வெளிச்சம்*
*கதவை அடைக்குமோ? சொல்.*

என இயற்சீர்களாலேயே அமைந்து தூங்கிசைச் செப்பலோசை நலம்சிறக்கவும்,

*எல்லார்க்கும் வாழ்க்கை எவருக்கும் வெற்றி!சின்ன*
*நெல்லளவா இந்த நிலம்?*

என இயற்சீர்களும் வெண்சீர்களும் கலந்து பயில ஒழுகிசைச் செப்பலோசை நலம்சிறக்கவும் அமைந்து மழைமொக்குகளின் குறட்பாக்கள் மனங்கவர்கின்றன; செவிக்கின்பம் சேர்க்கின்றன.

* * *

மூவகை ஓசை நயம் மட்டுமன்றிப் பல்வகை ஓசை நயங்களையும் இந்தப் பனுவலிலே கண்டு வியக்க நேர்கின்றது. எச்சங்கள் அடுக்கியும், ஒரு சொல் இருமுறை மும்முறை அடுக்கியும் வருமாறு படைத்துள்ள குறள்கள் 'அட்சர லட்சம்' பெறுமாறு விளங்குகின்றன.

*தழுவத் தழுவத் தமிழின் கவிதை*
*குழந்தையாம் யோரன் சுகம்.*

*மகிழ மகிழ மகிழ மலரும்*
*மகிழம்பூ யோரன் முகம்.*

*மிளிர்ந்து திரண்டு பருத்து விடைத்துக்*
*குளிர்ந்து குலுங்கும் கனி.*

என்றெல்லாம் நடைநலம் மிளிரும் குறள்வெண்பாக்கள் தமிழ்க் கவிதை உலகிற்கு ஈரோடு தமிழன்பனாரின் கொடைநலம் எனக்குறிக்கும் வண்ணம் சிறக்கின்றன.

* * *

வெண்பாக்களின் ஈற்றடி அமைப்புகள் முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை ஒன்றி அமையின் தலைசிறந்த ஒலிநயத்தோடு திகழும் என்பது வழிவழியாக வழங்கிவருகின்ற யாப்பு மரபாகும். எனினும் ஈற்றடியில் மூன்று சீர்களே அமைவதால் அவ்வாறு மோனையின்றிப் பாடினும் இழுக்கன்று என்பார் புலவர் குழந்தை. இந்நூலிலோ பல குறட்பாக்களின் ஈற்றடிகள் முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனையமைதி முகங்காட்ட ஒலிநலம் கொழித்து விளங்குகின்றன.

'போடவில்லை தாளம் புரிந்து'

'புவியில்நீ ஞானப் பொருள்'

'சிம்மமடா யோரச் செருக்கு'

'கோடிநிலா யோரன் கொடை'

இவ்வாறு முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை ஒத்து அமைதல் சிறப்பு என்னும் நிலையில், இதனினும் மிகுசிறப்பு என்னும் வண்ணம் ஈற்றடி முழுவதும் - மூன்றுசீர்களிலும் - மோனை ஒன்றி அமையுமாறு கவிஞர் ஈரோடு தமிழன்பன் அவர்கள் பல வெண்பாக்களின் ஈற்றடிகளை அமைத்துள்ளார்.

'வாலிழுப்பான் வம்பு வளர்த்து'

'உலாப்பார் உனக்குள் உவப்பு'

'நனைக்கும் நதிக்குள் நனை'

இவ்வாறான ஆட்சிகளால் இந்நூலின் வெண்பாக்கள் ஒலிநலம் மிளிர ஒளிர்கின்றன.

* * *

வெண்பா யாப்பில் ஈற்றடி அமைப்புக்குத் தனிச்சிறப்பான இடம் உண்டு, அதன்கண்ணும் ஈற்றுச்சீர் அமைப்புக்குத் தனித்த இடம் உண்டு. பத்தொன்பதாம் நூற்றாண்டில் 'அறுவகை இலக்கணம்' என்னும் இலக்கண நூலைப் படைத்த தண்டபாணி சுவாமிகள் நாள் மலர் என்னும் ஓரசைச் சீர் வாய்பாடுகளில் நிறைவுபெறுகின்ற வெண்பாக்கள் உத்தமப் பகுதியின எனவும் காசு பிறப்பு என்னும் ஈரசைச்சீர் வாய்பாடுகளில் நிறைவுபெறுவன அதனின் அடுத்த நிலையின எனவும் குறிப்பிட்டிருக்கின்றார். இந்நூலில் இடம்பெற்றுள்ள வெண்பாக்கள் அனைத்துமே யாப்பழகாலும் கவியழகாலும் உத்தமப் பகுதியினவெனினும் தண்டபாணி சுவாமிகளின் புத்திலக்கணக் கண்கொண்டு நோக்கினும் இந்நூலின் வெண்பாக்களுள் பெரும்பான்மையின நாள் மலர் என்னும் ஓரசைச் சீர் வாய்பாட்டிலான ஈற்றுச் சீர்களையே கொண்டு அமைந்து உத்தமப்பகுதியின என உவந்து போற்றும் வண்ணம் காட்சிதருகின்றன.

* * *

தொடைநலன்கள் பலவும் அழகுறத் துலங்கும் இந்நூலில் இயைபுத்தொடை நலமும் இடம்பெற்றுள்ளமை ஒரு தனிச்சிறப்பாகும். ஒருவகையான இயைபுத்தொடை நலத்தையும் பேச்சுத்தமிழையும் கொண்டு அமைந்துள்ள

அமெரிக்க நல்லுண வாஅள்ளு' நம்ம
தமிழுணவா வாயுள்ளே தள்ளு.

என்னும் அமைப்பிலான குறள்கள் இந்நூலுக்குள் அமைந்து குறள்வெண்பா அமைப்பில் பல்வண்ணக் கோலங்கள் காட்டுகின்றன.

* * *

கவிதையாய், அக்கவிதைக்குக் கைகொடுக்கும் கற்பனையாய், கவிஞனின் நெஞ்சில் சுடரும் கவிக்கனலாய், புவியில் பொலியும் ஞானப்பொருளாய்த் தமிழன்பக் கவி பெயரன் யோரனை எண்ணிப்பார்க்கின்றார்; எழுதிப்பார்க்கின்றார். அக்குழந்தையை முன்னிலைப்படுத்தி,

கவிதைநீ கற்பனைநீ நெஞ்சக் கனல்நீ
புவியில்நீ ஞானப் பொருள்

எனப் பாடிப் பார்க்கின்றார். குழந்தை அவருக்கு எல்லாமாகக் கோலமுகம் காட்டுகின்றது. அதேபோழ்தில் சங்கக் கவிமரபில் திளைத்துத் தழைத்த கவி அவர் என்பதை இந்த கவிதையின் கிளத்துமுறை கீர்த்தியுறக் காட்டிநிற்கின்றது. ஆம் திருமாலைப் பராவும் சங்கப் பரிபாடலில்,

'தீயினுள் தெறல்நீ! பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!
அறத்தினுள் அன்பு நீ! மறத்தினுள் மைந்து நீ!
வேதத்து மறை நீ! பூதத்து முதலும் நீ!
வெஞ்சுடர் ஒளியும் நீ! திங்களுள் அளியும் நீ!
அனைத்தும் நீ! அனைத்தின் உட்பொருளும் நீ!'

என அமையும் வாழ்த்து மரபின் எதிரொலியை இந்தக் குறளிலே நாம் கண்டு மகிழுகின்றோம்.

* * *

இந்த நூலை எதன்பொருட்டு, எந்தநோக்கத்தில் கவிஞர் படைத்திருக்கின்றார்? இப்படி நாம் கேள்வி எதையும் எழுப்பவில்லை. எனினும் இவ்வாறு எழக்கூடிய கேள்விக்கான விடையைக் கவிஞர் இப்படி மொழிந்திருக்கின்றார்:

பேரர் உலகத்தில் ஓரிடம் பெற்றிடும்
ஆர்வத்தின் ஆக்கம் இது.

தன் பேரன் யோரனைக் குறித்து மட்டும் இந்தப் படைப்பு படைக்கப்படவில்லை. ஒட்டுமொத்தமான பேரர் உலகிற்காகப் படைக்கப்பட்டது என மொழியும் தமிழன்பனார் பேரர்களின் உலகத்தில்

ஓரிடத்தைப் பெறுவதற்கான 'ஆர்வத்தில் மலர்ந்த ஆக்கம் இது'வெ‌ன நோக்கத்தை நுவல்கின்றார். நோக்கம் ஈடேறியிருக்கின்றதா என எண்ணுங்கால், பேரர்களின் உலகத்தில் - குழந்தைமையைக் கொண்டாடும் கவிதை உலகத்தில் - ஓரிடத்தையல்ல ஒப்பற்ற பேரிடத்தையே இக்குறள்வெண்பா இலக்கியத்தால் ஈரோடு தமிழன்பனார் அடைந்திருக்கின்றார் என்னும் உண்மை தெளிவாகின்றது.

* * *

ஏறத்தாழ முப்பதாண்டுகளுக்கு முன் நான் படைத்த குறள்வெண்பா இலக்கியமே கவிஞர் பெருந்தகை ஈரோடு தமிழன்பனாரை முதன்முறை சந்திக்கையில் அறிமுகப் பொருளாகியது. இடைப்பட்ட காலத்தில் படைப்பாக்கம் மறந்துபோனது; மெல்ல மெல்ல மறைந்தும் போனது. ஒரு திங்களின் முன் அமெரிக்க மண்ணிலிருந்து தாய்மண்ணிற்கு அவர் அனுப்பிவைத்த குறள்வெண்பாக்களைக் கண்டதும் என்னை அறியாமலேயே படைப்பாக்க மார்பு சுரந்தது. சில நொடிகளில் பின்வரும் வெண்பாக்கள் என் அகத்திலிருந்து அரும்பின:

**யாரிந்த யோரன்? அகத்தைத் திருடுகிறான்;**
**சீரிலகும் வண்ணம் சிறந்து!**

**நம்காலப் பாட்டுலக நாயகரின் பேரனிந்தச்**
**செம்மல் எனமகிழ்ந்து செப்பு.**

**வெண்பாத் தமிழ்வானில் வெண்ணிலவாய் யோரனிவன்**
**கண்மலர்தல் கோடிக் கவின்.**

படைப்புமனம் மறந்துபோன என்னையே மீண்டும் படைக்க வைத்து விட்டது இந்த நூலின் குறட்பாக்கள். அப்படியாயின் இந்நூல் படிப்பவர்களின் நிலைகளுக்கேற்ப அவர்களை உயர் உயர் நிலைகளுக்குக் கொண்டு செலுத்தும் என்பதுதானே பொருள். இரசிகர்களை இரசிகமணிகளாக்கும்; சுவைஞர்களைப் படைப்பாளிகளாக்கும்; படைப்பு மனோபாவம் மரத்துப் போனவர்களைப் படைப்புகள் பீறிட்டெழ மீண்டும் படைப்பாளிகளாக்கும் எனச் சொல்லும்வண்ணம் கற்போரை உந்திக் களிகொள்ளச் செய்யும் ஆற்றல் மிக்கனவாக இந்நூலின் குறட்பாக்கள் கோலோச்சுகின்றன. கோலோச்சும் தமிழன்பனாரின் செங்கோல் நிழலில் திளைத்து இன்புறுவதாகுக தமிழிலக்கிய உலகம்.

**ய.மணிகண்டன்**
20-11-2013

# Introduction

**S.A.Sankaranarayanan**

"What is there in a name", is a usual quibble. But who can deny the halo that surrounds the act of naming. It is in christening, the life starts!

All humans, we don't know, even some animals, wiser than we suppose them to be, subscribe to being called by a name!

When a name is more than a name, it authenticates existence. Initially it is numinous; at length, it is integral part of being.

Poet Tamilanban's Joran Kural is a whimsical medley of melodies in kural form celebrating Joran, his grandson so named.

The name, Joran, acknowledges the patriarchal forbears indirectly and has in it the letter-sounds of poet's name Jagadeesan, and his son's and his senior's; and together the name formed as Joran, hails the Norwegian matriarchal bearings; The name means' Earth Mover'!

Making it Joran-Vel, the name tends to a pious affection beyond words bringing forward a new start-up in the lineage. Joran is kumaran and praising Joran is "Kaumaaram", a sept adoring the remarkable powers latent in a divine childhood.

We know the kural venpaa:

"Amarar idartiir amaram purintha

Kumaranati nenjee kuri"

No wonder the poet of Chenni Hill is devout in his choice of kural form for his purpose.

The kural form in Tamil is of seven seers, four in the first line and three in the following stich.

Strictly the form is distich, but the Tamil kural in less than a line and a half winds a milestone of thought.

Like the first wind of a play rope around a top at its peg the line operates with no slippage and controls the flash release of a unit thought or idea.

Joran kurals are gnomic in precision and clowns Time! Joran's name is made common denoting a child of precocity, strength, disposition to belong to great poetic heritage, and pan-Tamil world, synonymous with the American, in the Herman Melville's sense

Though occasioned and personalized, the kurals transcend and tell us of a doctrinaire understanding:

In the words of William Wordsworth, "The Child is the Father of the Man."

On my first reading of Joran Kural which I could hear more than mean inwardly( a kind of shravanam, a kind of listening to, conforming to the pitch and tone of the composition), I oracled the beauty and truth of the poet's composition.

It is well, in order, to quote myself:

From pen-name to name when one veers
Search for identity signs out;
Return to origins signs in;
Nativity in the crib:12-12-12, three cheers!
What we are born of we can't be free from;
Sigma all we have been hitherto
Is ab initio! Joy cascades in tears!
Of tilth and toil, of Earth and her might,
Of immensities hid to the tongues,
In a sprout under a senior-watch
Of the Latus Rectum of an egg
Prior to laying
Of a start-up in vicarious jigsaw
To play in and play with
A Puzzling Smith and Myth!

—SAS

The welling poesy crashes like a neap tide in nano-ness of kural-form!

I recall a film scene ie, Kaathavarayan in the chamber of Aaryamala, entering as a bird to zoom in, in a sort of transmogrification; when someone intruded, he receded into the bird form, pretty small to escape notice! How secret is pleasure when it is pure and sacred!

Like as that the inward joy is juggled in two tacit lines every time to toddle out to tell us tell on us with a telling effect.

An analogy in the physics world comes handy: Fitzgerald contraction!

Tamilanban is ever experimenting with new and old forms to bring out his many many quodlibets!

I imagine Joran's parents singing:

"Unto us he is born, Joran-Vel moving Earth

Minas, whales, humans and all are graced over in mirth."

Now allow me a little high serious aside on Joran Kural:

Imperatives, when categorical, repeat three times in our convention.

OM Shanthi Shanthi Shanthi is an example; so is namo namo nama; so too tripyatha triyatha tripyatha!

I pitch on the final Joran Kural 265.

Besides being an acknowledgement of Ulaka-p-pothumarai, besides being a didactic injunction to the pristine childhood to cultivate an ethic, the 265th from the author of VanakkamValluva rings like 'mangalaasaasanam' (auspicious ordination). The kural begins with 'thiru' and tallies on 'thiru'. —an appellation that never hangs on for third umpire certification! Grace is never spent. Can there be a better legacy from the preceptor-poet-Father to his flock of children than this?

Elsewhere Tamilanban has tantalised—

"Parimelazhakar sonnadhu

Manakkudavarukkup puriyavillai"

Suddenly Tamilanban speaks like a Rabbi and feels in an apostolic vein! Childhood divine never needs sermonizing.

To redeem an ethic is to prophesy weal. Self-assuredness helps the refrain. Not emphasis, but self-assuredness! With Tamilanban, urban reader and his intelligence come on the scene. Joran-name helps him. Joran like Ooran is soil-bound, rural, wholly soul and feeling. But, now appears a spirit that grows up in the cities of classical cast, that could only live in city, seldom understanding or respecting the peasant's country-side. Reading kural is seen as a problem.

What a contrast!—Child and Man, Soul and Intellect, Devotion and Resolve to change sides! Seems, the poet has begun by seeing in the readership a danger to Kural. Valluvar's Kural as self revealed ethic has no 'intellect'. For the devotiomoderna, it is not possible to understand Tamilanban—doubtfully they may look at them while their image of Thiruvalluvar whom I had never seen, pale in the bright hard light of propositions. Holy memory fades into scholastic systems! When Chennai turns Chennimalai, it will be of classical cast and then Hertha smiles!

The kurals1-265 and those in the proem in particular are landmarks in the Balakanda of Joran's! Let me annotate with a context in Ramayana: Viswamitra proposes to Sri Rama he should go to Mithila. The attraction in Mithila is twofold. King Janaka (Tiller-King) performs a great sacrifice, it is worth watching it. In King's possession is a bow, the one which Siva used when he destroyed the Tripuras. It is to the 'bow' we turn to. The bow was handled by the great god in a great action which subsequently attracted the notice of all kinds of people because they came and tried to lift it and draw. They could do neither! Like as that is Kural, a line and a half writ long ago for a great action by a great Man and all the world tried to follow or allowed to be led by it. Could the world do either??? Moot Point!

"So Joran you had better read, learn and do it", Tamilanban says in a halt-and-go-style!

Often in my lectures, I have been pointing out that translation sematology has a theological dimension. Wordsworth's 'Rainbow' or 'Intimations' do celebrate it. Probably if we listen to Tamilanban reading his verses, in that 'Shravanam', we shall hear the poet of "Prithvi"! The

world as a whole is a 'kshetra'. The Child is the Father of the Man-on-Earth! Mars and Moon forbid! (I must here thank Harish, Lakshmi, Sriram the Wiki Editor of the Week awardee & Shravan for fine tuning certain perceptions in this aside, rather passively) I know less. mea culpa.

Yours

**S.A.Sankaranarayanan**

**Proem**

In limpid poetics of Kural, a tangled play unawares??
O, Valluva[1]! Won't you forgive my airs? 1

A sub-junior native in democracy of prosody
To tender my vote, I came, they called me! 2

A play-let, meagre motif, some concern
No chicanery no turtle-turn! 3

Some kurals sound philosophic, some oriole- echo
Just magpie-chatter in toto! 4

Now with the child, now with the kural, Aye
Tamil gaming here one-a-side play! 5

Drums a ratlle dizzily! Why not
You hear, un-bored in an earshot? 6

பாயிரம்

தெள்ளுகுறள் யாப்பில் தெளியா விளையாட்டு!
வள்ளுவரே! மன்னிப்பீ ரா? 1

யாப்புலகில் குட்டிக் குடிமகன்நான் வாக்களிக்கக்
கூப்பிட்டார் கள்நான்வந் தேன். 2

கொஞ்சம் விளையாட்டு, கொஞ்சம் பொருள்கவனம்,
வஞ்சனை ஏதுமில் லை. 3

தத்துவமாய் உண்டுசில, தத்துவம்போல் உண்டுசில
மொத்தத்தில் தத்துபித்து வம். 4

குழந்தையோ பாட்டம் குறட்பாவோ பாட்டம்
மழலைத் தமிழ்விளை யாட்டு. 5

கிலுகிலுப்பை ஊட்டும் கிறுகிறுப்பைச் சற்றும்
அலுக்காமல் கேட்கலா மே! 6

'Theemaa', 'Pulimaa'[2] sought a pass.
Can bums refuse their cause? 7

Joran is the protagonist—Joran-like
All whosoever, are, never unlike! 8

Grandpa-world-offering Tamil-kiss
To bud in season for grandsons'! 9

To get a berth in the bandwagon of grandchildren
A dale of zeal in creative glen! 10

## A Handsome Welcome

Venpaa[3]- festivity at peak, why stuck in home
Apple of my eye, up, up, and come! 11

Got the invite? or still to get??
Why the Akaval[4]is slow to call, arriving yet! 12

தேமா புளிமா அனுமதி கேட்டார்கள்
நாமா மறுக்கமுடி யும்? 7

யோரன் கதாநாய கன்யோரன் போன்றுள்ள
யார்யாரும் அப்படித் தான். 8

தாத்தா உலகம் தருந்தமிழ் முத்தமிது
பூத்துமலர் பேரர்க ளுக்கு. 9

பேரர் உலகத்தில் ஓரிடம் பெற்றிடும்
ஆர்வத்தின் ஆக்கம் இது. 10

## கைகுலுக்கும் வரவேற்பு

வெண்பா விழாவேளை வீட்டிலென்ன வேலைஎன்
கண்ணே!வா! வாவா கடிது. 11

தகவலைப் பெற்றிருக்கும்! தப்பென்ன இன்னும்
அகவலை என்காணோம் பார். 12

Vanjippaa[5] and Kalippaa[6], or ode might fetch some
Wait let us for their trailing income! 13

Paripaattu[7], usual its trail, unpunctual its drag, even at their noon!
Snag, slug and swoon! 14

Blank locus-classicussetting, and tonal fall
Are Joran's room-fellows after all! 15

Did none pep up the feminine lay on cards?
By now she must be in our yards! 16

"Prevail in 'Third Person' as you should
Under the auspices of 'The Second'-that's certain good! 17

Of what avail is to know whosoever one may be?
Better join our Joran and see! 18

வஞ்சி கலியிரண்டும் ஏதேனும் வாங்கிவரும்
கொஞ்சம் பொறுப்போமே நாம். 13

எப்போதும் இப்படித்தான் இந்தப் பரிபாட்டு
மப்பு மதர்ப்பு மயக்கு. 14

துறைவிருத்தம் தாழிசை எல்லாமே யோரன்
அறைத்தோழர் ஆனவர் கள். 15

உந்து கிடைத்ததோ இல்லையோ வந்திங்கே
சிந்தின்னும் சேரவில்லை யே! 16

படர்க்கையில் முன்னிலையில் நீயே படர்ந்து
நடக்கின்ற தன்மைமிக நன்று. 17

யாரோடு நீபழகி என்னபயன் வந்தெங்கள்
யோரனுடன் நீபழகிப் பார். 18

Legs he skews, ears he pulls and tucks at the tail
Of his puppy-pet Isabel. 19

A mere kid idyllic cute on his part
Is he, yet more! is any that smart? 20

Vaigai[8] is his one eye, Mississippi, the other,
Joran is unfailing River Tamil Mother. 21

American though, rooted in kinship rare
Tamil is he totally to declare! 22

Rolls and blinks Joran. Rush to see
How by his eye clean bowled are we! 23

War-car steering super Cera-King's conquering gaze
Is no match for Joran's eye-probing pace! 24



காலிழுப்பான் காதிழுப்பான் நண்பன் இசபெல்[1]லின்
வாலிழுப்பான் வம்பு வளர்த்து. 19

குட்டிப் பயல்மட்டு மா?யோரன் போலொரு
சுட்டிப் பயலுண்டோ சொல். 20

வைகை ஒருகண் மறுகண் மிசிசிபி
பொய்யாத் தமிழ்ப்புனல்யோ ரன். 21

பிறப்பால் அமெரிக்கன் என்றாலும் வேரின்
உறவால் தமிழனென்றே ஓது. 22

உருட்டி விழிக்கின்றான் ஓடிவந்து பார்த்தால்
சுருட்டிவிடும் யோரன்கண் வீச்சு. 23

தேரூர்ந்த சேரத்துப் பேரரசர் வீரமெங்கள்
யோரன் விழியோர வீறு. 24

His face circular squares the Moon,
Himself a Trophy in a round so soon! 25

Discerning now Joran won't sing
Balamurali[9] puts off lap-tapping! 26

Padma Subramani[10]-auntie dance on dais
Is but Joran's giggle of Grace! 27

Googly-eye of Sivaji[11] in Sindunadhi[12]-lay
Seek and find in Joran's you may! 28

O, Joran, yodel, and even as you do
Talks Tamil, your Ma, ambrosial too! 29

Is Joran indeed a tot tiny?
Who's his equal really?? 30



வட்டமுகம் வான நிலாவுக் கறைகூவல்
விட்டமுகம் வெற்றி விருது. 25

பாடவில்லை யோரன் எனப்பா லமுரளி[2]
போடவில்லை தாளம் புரிந்து. 26

பத்துமா சுப்ரமணி யப்பாட்டி[3] ஆட்டமெல்லாம்
அத்துபடி யோரன் அருள். 27

சிந்துநதிப் பாட்டில்[4] சிவாஜி[5] விழியுருட்டல்
வந்துபார் யோரன் வசம். 28

தமிழ்பேச டாயோரன் நீபேச உன்தாய்
அமுதாய்த் தமிழ்பேசல் ஆம். 29

அசத்துகிறான் ஆளென்ன சின்னவனா? யார்தான்
நிசத்தில் இவனுக்கு நேர்? 30

Sing your town I must; but Joran! You,
If I sing, err do I?, my song, undue?? 31

The kids of the world in you are themes!
And within me no me, it seems! 32

As I scoop and throw your smiles over land and sea,
Lightning angry thunders me! 33

Idyll, imagining, heart-felt hearth fire all are you
And on earth Ens of Gnosis true! 34

O, Sky! Feel for your single moon alone on the run?
Will give you myriad moons, readily Joran! 35

Whenever Joran tends a flower, a spray
Of attitudes fill the gift-on-a-tray 36

ஊருக்குப் பாடவேண் டும்நான் உனைப்பாடின்
யோரா தவறா உரை. 31

உன்னுள் உலகக் குழந்தைகள் உல்லாசம்
என்னுள்ளே இல்லையடா நான். 32

உன்சிரிப்பை ஊரெல்லாம் நானள்ளி வீசுகிறேன்
மின்னலுக்குக் கோபமென் மேல். 33

கவிதைநீ கற்பனைநீ நெஞ்சக் கனல்நீ
புவியில்நீ ஞானப் பொருள். 34

ஓடிவந்துன் ஒற்றைநிலாப் பேசட்டும் வானமே!
கோடிநிலா யோரன் கொடை. 35

பூவினைப்போய் யோரன்கை தொட்டவுடன் ஆயிரம்
பாவனைகள் வெற்றிப் பரிசு. 36



A plea to Nature! Having seen your face,
Joran, Her lightning fails to fade! 37

Eager to eye your face even by day
Moons heartily overstay!! 38

Try a line Joran, Mother Tamil would hie
To you with Amen many!! 39

O, Joran, A Kural A Day
Makes all days divine, I say. 40

I stand and wait, your Tamil to hear
Will you please change my gear?? 41

Did the genius of Einstein from Physics, wow!
Return as our Joran now? 42



இயற்கையிடம் கோரிக்கை; உன்முகத்தைப் பார்த்துப்
பெயரமன மில்லாமின் னல். 37

பகலிலும் உன்முகம் பார்ப்பதெவ் வாறாம்
அகலமன மில்லா நிலவு. 38

ஒருவரி நீசெய் தமிழ்த்தாய் ஓடி
வருவாள் மறுவரிக ளோடு. 39

ஒருநாள் ஒருகுறள் யோரா படிநீ
திருநாளே எந்நாளும் தேர். 40

உன்தமிழ் கேட்க உவப்போடு காத்துள்ளேன்
என்னையே மாற்றுவா யா? 41

அறிவுலக மேதையாம் அய்ன்சுடீன்[6] மீண்டும்
திரும்பினார் யோரனாய் இங்கு. 42

Speech at Gettysburg, what if? Joran's exceeds
The grasp of Lincoln's reach! 43

Friend, calm if you are, calm he is. Just stray aside,
Lion's rage is Joran's raid! 44

[13]Mohammed Ali's bouts are none
For jumpy Joran punch is fun! 45

Joran-kissed-groves often sob and feel
As an orange peels peel after peel! 46

A crescent to grow full gives ground, anon,
Joran's face; would it give leave to Full Moon 47

Moons, sky and stars pearly retinue and march into-
Hooray, three cheers within you! 48



கெட்டிஸ்பார்க் பேச்சென்ன[7] பேச்சு?நம் யோரனாம்
சுட்டிலிங்கன் பேச்சொன்றே பேச்சு. 43

சும்மா இருந்தால் இருப்பான் எழுந்திருந்தால்
சிம்மமடா யோரச் செருக்கு. 44

மம்மதலி[8] குத்தெல்லாம் குத்தல்ல; யோரனெம்
செம்மலின் கைக்குத்தே குத்து. 45

யோரன் உதடுகளால் தோற்றே உடைந்தபல
ஆரஞ் சுவனம் அழும். 46

பிறைவளர யோரன் முகத்தயை உண்டா?
முழுநிலவுக் கோய்வுதரு மா? 47

நிலாவைப்பார்! வானம்பார்! நித்திலமீன் கள்பார்!
உலாப்பார் உனக்குள் உவப்பு. 48

Flowers, bees, snow dew in spree
Gather all in glee! 49

Who might have pulled open the bud of rain?
Would a tender melt-heart redress it again? 50

Did Sun brood to hatch the snow-ovum?
Where hear the sparkler-chicks? in the forum? 51

Venpaa versing restarts! O, my Eye, tell,
Would the game tire you at all? 52

Why fritter time over-learning? Be pressed
To choose a course and bag the best! 53

Why read at random; read a choice
That makes a pundit of you to voice! 54

பூக்களைப்பார்! வண்டுகள்பார்! பொட்டுப் பனித்துளிபார்!
தேக்கிப்பார் எல்லாம் திளைத்து. 49

மழைமொக்கை யாருடைத்தார்? பார்த்துருகும் நெஞ்சம்
இழைக்குமா மீண்டும் அதை? 50

பனிமுட்டை, சூரியனா பார்த்தடை காத்தான்
மணிக்குஞ்சுக் கூட்டம்தான் எங்கு? 51

வெண்பா விளையாட்டு மீண்டும் தொடங்குதடா
கண்ணே! களைப்பேது சொல். 52

காலமெல்லாம் கற்கலாம் ஆனால் கருதியொன்றில்
மேலாக வந்துவிடல் மேல். 53

கண்டதைக் கற்காதே! பண்டிதன் ஆக்குவதைக்
கண்டதைக் கற்றால் பயன். 54

What if you be well read, or have honours??
Trend now is *discordia concors.* 55

A co-learner by your side, well,
Your win on his grief, is it fair? Tell. 56

Won't yours hold a share in rise,
In others' win though Pyrrhic to praise? 57

Is school a pseudonym of war-field
For winners to toss and losers to yield? 58

Learning and testing in days ahead,
Hope, shall change hale and healthy instead! 59

Education for all, Success for all, no bar!
Our globe is no tiny mustard, sir! 60



மெத்தப் படித்தென்ன? மேன்மைபல பெற்றென்ன?
ஒத்தறியாப் போக்கால் உரை. 55

பக்கத்தில் உள்ளவன் கூடப்ப டிப்பவன்
துக்கத்தில் என்ன சுகம்? 56

உன்வெற்றி இன்னொருவன் வெற்றி உருவாகத்
தன்பங்கு தந்தால் தகும். 57

வென்றவரைத் தோற்றவரைப் பெற்றெடுக்கும் வெங்களம்
ஒன்றுக்கா பள்ளியென்று பேர்? 58

கல்விமுறை தேர்வுமுறை எல்லாமே உன்நாளில்
நல்லமுறை ஆகுமென்று நம்பு. 59

எல்லார்க்கும் வாழ்க்கை எவருக்கும் வெற்றி!சின்ன
நெல்லளவா இந்த நிலம்? 60

In our commodious School of Earth awards
Sure queue up for all wards 61

Life is flower-culling; gardens sprawl in troth;
Callous to ravage the growth! 62

Harvest of crops grown on tears of woe
Is sinful chaff you know 63

Butter for some; bird-lime for some!
Lo! Unpalatable curriculum! 64

Common is dawn; so is sky in ether!
So are rains in fair weather! 65

What use is learning minus lift-up?
Pain in vain, bottom-up! 66

பரந்துபட்ட பூமியில் வாழ்க்கைப் பரிசு
நிரந்தரம்எல் லாருக்கும் உண்டு. 61

பூக்கொய்தல் வாழ்க்கையடா! பூங்கா விரிந்ததடா!
தாக்கல் தகர்த்தல் தவறு. 62

அடுத்தவன் ஆற்றா அழுகைக்கண் ணீரால்
தொடுக்காதே வெற்றிமா லை. 63

வெண்ணெய் சிலர்வாயில் சுண்ணம் சிலர்வாயில்
பண்பற்ற கல்வியின் பண்பு. 64

வையம் பொதுவாகும் வானம் பொதுவாகும்
பெய்மழை யார்க்கும் பொது. 65

படித்தலால் மேன்மைப் படுதல் இலையேல்
படித்தல் முயற்சியே பாழ். 66

Read, learn, cultivate knowing, Joran! A day may dawn
When you become the lore and lesson 67

Beasts unschooled are sane
Humans, alas, are a bane! 68

The wild if tutored might still
Evolve; Man learned though is bestial! 69

A scorpion can auto-correct; so a serpent cool;
Incorrigible is Evil-Rule! 70

Mahatma's way, Periyar's path, as meant,
Joran, better take to, swim the current! 71

What else is the Reign of Terror's vice,
But its political malice! 72



படித்துப் படித்துநீ பாடமாய் ஓர்நாள்
விழுந்து விடுவாய்யோ ரா 67

படிக்கவில்லை எவ்விலங்கும் பாழ்பட்ட தில்லை
படித்துப்பாழ் பாழ்பட்டார் யார்? 68

கற்றிருந்தால் மாறி யிருக்கும் விலங்குகள்!
கற்றும் மனிதன் விலங்கு. 69

திருந்தினால் தேள்திருந்தும் பாம்பு திருந்தும்
திருந்தார் அரசியல்தீ யர். 70

காந்தி வழியில் பெரியார் வழியில்நீ
நீந்தி வருவாய்யோ ரா! 71

இன்னா அரசியலின் இன்னாத தேதெனில்
இன்னா அரசிய லே. 72

Learned if are virtuous too,
Make benevolent rulers new.73

The Way of the World I heed and say;
If wrong you may unsay! 74

To out-record win after win is win,
And not being whelmed by giving in! 75

Let Kavin harp on Tolkappiyam[14] stuff!
You plumb the deeps of Nannool[15]- bluff! 76

If Kavin reels out ornate Silambu[16]
Sequel Manimekalai[17] is for the younger to dooo! 77

Manna-sweet Bharathi[18] you are, Joran, ambrosial
Kavin, your elder is [19]Bard's melitus celestial 78

அறிவாளர் நல்ல அறவாள ராயின்
அரசியற்குத் தக்கார் அவர். 73

உன்கால நாட்டு நடப்பை உணராமல்
என்போக்கில் ஏதோசொன் னேன். 74

வெற்றிகளை வெற்றிபெறல் வெற்றி, அதுவன்றி
வெற்றியன்று வெற்றிமுன் வீழ்வு. 75

கவின்சொல்வான் தொல்காப்பி யப்பொருள் கண்டு,
விவரிநன்னூல் பற்றி விரித்து. 76

சித்திரச்சி லம்புகவின் சொன்னாலென் சின்னவனே!
ஒத்துமணி மேகலைநீ ஓது. 77

தேனமுதப் பாரதிநீ யோரன்! அவன்தாச
வானமுதம் அண்ணன் கவின். 78

Rhyme and rhythm, pick by rote of poesy you may;
Beyond Tradition, let Kavin bloom in spray! 79

Chant Kamban[20] to wing in poetic sky!
And the throne of poetry be nearby! 80

To draw a venpaa without flaw at will
Consult Pukazhendi[21] and his quill. 81

Fill yourself with Father [22]Periyar's fiery reason
That burns the dross of unreason. 82

If freedom and self-respect are lost, will
Life be secure from peril? 83

Can ever a mina parakeet beat you dear
You, the Sire of the vast celestial sphere? 84

எதுகையுடன் மோனைகற்றுப் பாமரபு பார்நீ!
புதுக்கவிதை பூப்பான் கவின். 79

கவிதைகற்கக் கம்பனைக் கற்றால்; கவிதைத்
தவிசுனது காலருகில் தான். 80

இகழேந்தா வெண்பா இயற்றலாம் யோரன்!
புகழேந்தி யைப்போய்நீ பார். 81

நெருப்பாகச் சிந்தித்த தந்தைபெரி யாரில்
நிரப்பிக்கொள் உன்றன் நினைவு. 82

விடுதலை தன்மானம் விட்டுவிட்டால் வாழ்வு
கெடுதலை யார்தடுப் பார்? 83

மைனாகிளி உன்னை மடக்குமா? எங்களின்
நைனாநீ விண்பரப்பின் வேந்து. 84

Watching a dove taking lesson in your play
School, an eagle might join the very next day! 85

What Thanush! What Vijay! What Visal!
Aren't you Joran more phenomenal? 86

Ban on ballad or lag in lullaby?? Why
Try raucous rock or shanty-bay?? 87

Safer to live in goodly human care
Than on hard and software! 88

Ask Ma for dosa[23], idly, also idiaappm,
Pat, she'll cook and serve them. 89

Call for kitchadi, uppuma, purikizhangu, a piece,
Nagging never eat such delicacies 90

புறாவொருநாள் பாடம் படிக்கும், கழுகார்
வராரா மறுநாள் வகுப்பு? 85

என்ன தனுசு? விசைவிசால் தான்என்ன?
அன்னவர்க்கும் யோரன் குரு. 86

தெம்மாங்கு, தாலாட்டுத் தேராமல் ஏனடா
கும்மாங்குத் துப்பாட்டுக் கள்? 87

வன்பொருள் மென்பொருள் கற்றலின் மானுட
நன்பொருளாய் வாழ்வதே நன்று. 88

இட்டளி தோசை இடியாப்பம் அம்மாவே
சுட்டுக் கொடுப்பார்நீ கேள். 89

கிச்சடி உப்புமா பூரி கிழங்குநீ
நச்சாமல் கேள், சாப் பிடு. 90

Sweet-rice, gravy, vada, uthappam, bally well, eat
The full menu to your surfeit. 91

Thenkuzhal, seedai, murukku, poriurundai,
No omission,-all these, you try. 92

Berger, pizza, sandwich any chew, ask
Ma's wonder hand is for the task! 93

Cream, jelly, jam juice or [illegible]
No wrong to take them nice, see! 94

Palm fruit, may be even sweet peat,
They are no neem for your treat! 95

If you take to canned food
The vim of life is gone for good! 96



சர்க்கரைப் பொங்கல்சாம் பார்வடை ஊத்தப்ப
வர்க்கமெலாம் வாங்கு வெளுத்து. 91

தேன்குழல் சீடை முறுக்கு பொரியுருண்டை
ஏன்வேண்டாம் எல்லாமே தின்னு. 92

பர்கரா சாண்ட்விச்சா பிட்சாவா பையாகேள்
அற்புதம்தான் உன்அம்மா கை! 93

பழக்குழைமம் நல்ல பனிக்குழைமம் உண்ணும்
பழக்கத்தில் இல்லை பழுது. 94

பனங்கிழங்கும் சர்க்கரை வள்ளிக் கிழங்கும்
உனக்கென்ன வேம்பாநீ உண். 95

புட்டி உணவுக்குள் போய்விழுந்தால் வாழ்க்கையில்
நட்டம் வருமென்று நம்பு. 96

Vitamin-rich meal be your feed;
To brochure there is no need! 97

Scoop all the favored American caviar.
And push in as well our Tamil dish dear 98

Pudding, pulped rice, peas and baby corns popped in fun,
Poli and all coat your p(a)late, Joran! 99

Draughts of boiled corn, mashed gruel, no measure!
Warm is life, full of pleasure. 100

"Sing O, Son of Bharathi, Sing, O, Grand One
Named after chaste Tamil bard, O, Joran" 101

[25]Liza's dear littilun! O, the pride and awe
Of your teacher-grand ma! 102

சத்தான சாப்பாடே தேவை, திசைபிரித்துக்
கத்தவே தேவையென்ன சொல். 97

அமெரிக்க நல்லுண வாஅள்ளு! நம்ம
தமிழுணவா வாயுள்ளே தள்ளு. 98

புட்டவல் பட்டாணி சுண்டலுடன் போளியெல்லாம்
வெட்டா யோராநீ வெட்டு. 99

கொஞ்சமல்ல கஞ்சிகுடி! கொஞ்சமல்ல கூழ்குடி!
கொஞ்சமல்ல வாழ்க்கைக் கொழிப்பு. 100

பாரதி செல்வனே! பைந்தமிழ்ப் பாவலன்
பேரனே! யோரனே! பாடு. 101

அருமை விசாமகனே! பாட்டிச் செவிலி
பெருமைமிகு பேரனே! பேசு. 102

Heir to Valluvar, House of Whitman too,
Hoard all joy in heaps, may you! 103

[26]Kavin's younger, carat-gold
Are you, as often told! 104

You the twain chancellors of mischief-world,
Your dear presidium, beauty's whole! 105

At sixes and sevens in kissing? Why?
Can sweet puff suffice the hungry? 106

Dance and song make a home,
Why then mute your flimflam? 107

Jacki Chan, who is who?
Don't they owe over dues to you? 108

வள்ளுவன் வாரிசுநீ விட்மனின்[9] வம்சமும்நீ!
கொள்ளடா இன்பம் குவித்து. 103

தங்கக் கவினுக்குத் தம்பிநீ யும்சொக்கத்
தங்கமே என்பேன் தழைத்து. 104

குறும்புலக வேந்தர்கள் உங்கள் இருவர்
அருந்தலைமை ஞால அழகு. 105

அஞ்சுமுத்தும் ஆறுமுத்தும் என்ன கணக்கடா
பஞ்சமிட் டாயா பசிக்கு? 106

ஆடுவதும் பாடுவதும் வீட்டிற் கழகடா
வாடுவ தேன்உன்றன் வம்பு? 107

சாக்கியென்ன சானென்ன[10] எல்லாம் பழையகடன்
பாக்கியுன்பால் உள்ளவர் தாம். 108

Superman, Spiderman and all fellow
Perch as dwarfed wrens before you, lo! 109

Even Bhima[27] shrinks to a dot. Can aught
Stand your single shot? 110

Bad and good are tongue and salver!
Save the saver from the other! 111

What's thought over, speak,
Not whatever thought erratic! 112

Were one to turn a thingumajig, musing
On a medley of all seen, it is chaos undiscerning! 113

What gain is in idling! Get around
Even that on gains -for- pains -ground! 114

கொம்பாதி கொம்பன்[11] வலைவீரன்[12] எல்லாமே
செம்பாதி உன்முன் சிறுத்து. 109

சோட்டாவாம் பீமனாம்[13] நிற்பானா நீபார்த்துப்
போட்டால் ஒரேஒரு போடு. 110

நாக்கில் இருக்குது நல்லதும் கெட்டதும்
காக்கத் தெரிந்துகொள்கண் ணே. 111

பேச நினைத்ததைப் பேசு, நினைத்தவெலாம்
பேசாதே பீழை வரும். 112

கண்டதை எண்ணியே காலம் கழித்திடும்
பண்டமாய் மாறினால் பாழ். 113

சும்மா இருப்பதால் என்னசுகம்? அச்சுகமும்
சும்மா வராததைச் சூழ். 114

Close your eyes, trance a dream,
Open, the scene is enthememe! 115

I philosophize! Joran, If it belies, or you doubt,
Take it not, spit it out! 116

In throbbing drought of ideal Berkley
Joran-Tamil patter a plea! 117

Zeal flaps; Hart[28] claps! Plum!
Audience-plaudits in auditorium! 118

Shower, sprout, growth are Joran-Trinrty
Compounding Tamil's homogeneity! 119

The Tamil I missed to evangelize in the new soil
Joran, you must, must at all! 120



கண்மூடிச் செய்தால் தியானக் கனவெனில்
கண்திறந்தால் காட்சிப் பலிப்பு. 115

தத்துவமா நான்சொன்னேன் தப்பென்றால் யோராநீ
ஒத்துக்கொள் ளாதே உதறு. 116

படபடக்கும் வேட்கை பருக்கிலி[14]யில் ஓ!ஓ!
சடசடக்கும் யோரன் தமிழ். 117

ஆர்வச் சிறகெழுப்பி ஆர்ட்டு[15] கரவொலிசெய்
தார்ப்பார் அதிரும் அரங்கு. 118

மழைப்பு, தழைப்பு, மதர்ப்புறும், யோரன்
குழைப்புத் தமிழின் குறிப்பு. 119

நான்பரப்பா நற்றமிழை அம்மண்ணில் யோரன்நீ
தான்பரப்ப வேண்டும டா! 120

Stay Tamil-American, no default in staying so
Forget Tamil if you, non-Tamil outcast, you turn a woe! 121

Your dad is competent in lucid Tamil. Had he cultivated
Me he may have outdone, more updated! 122

Knowledge and oratory, whatever so
Original pure is dad, you know! 123

[29]Poonkundran-via is chosen dad's sake,
Suits presently for you too in the wake! 124

Caste nor creed nor faith bar you
Dash and bunk them stern and prow! 125

Future Tamil girl would be your would-be,
(I Hope) Most opportune, and mostly good be! 126

தமிழமெரிக் கன்என்றால் தப்பில்லை ஆனால்
தமிழ்மறந்தால் நீதமிழ னா? 121

உன்தந்தை ஒண்டமிழ் வல்லவன். கற்றிருந்தால்
என்னையே மீறியிருப் பான். 122

அறிவாளி பேச்சாளி யாவிலும் தூய
அசலாளி உன்னப்பன் ஆம். 123

பூங்குன்றன் போனவழி உன்தந்தை தேர்ந்தவழி
ஈங்குனக்கும் ஏற்ற தது. 124

சாதிதடை இல்லை சமயம் தடையில்லை
மோதி உடையவற்றின் மூக்கு. 125

வருநாள் தமிழ்நாட்டு மங்கை துணையாய்
வருவாளா வந்தால்நல் வாய்ப்பு. 126

When pollen is strewn all over
Why flit on tin-roof and cheer? 127

Hear all tales in monsoon tossed;
By Spring, poesy will have you in her class! 128

When thunder rolls and flash strikes
Sit close to Pa and Ma, learn their likes! 129

Be friends with papillon, you can,
Others play on their close and wan! 130

Tales of a tough hill hear and soak at will
In the very tales cascading rill. 131

Sow pearls to reap smiles and fun?
Seed ten to level the eleven?? 132



மகரந்தம் பூமியெங்கும் வண்ணம் சிலிர்க்கத்
தகரத்தை மொய்த்தா தவிப்பு? 127

மழைநாள் கதைகேள்! வசந்தம் தழைநாள்
அழைக்கும் கவிதை வகுப்பு. 128

இடியுருளும் மின்னதிரும் நேரத்தில் ஈன்றோர்
அடியமர்ந்தே கேளனுப வம். 129

பட்டாம்பூச் சிக்குன்னை விட்டால் பழகுதற்கே
ஒட்டவரு வார்யார்யோ ரா? 130

கனத்த மலையின் கதைகேள்! கதையால்
நனைக்கும் நதிக்குள் நனை. 131

முத்தை விதைத்து முறுவல் அறுவடையா?
பத்தைவிதைத் துப்பதினொன் றா? 132

In raindrop on roses my heart stays.
Call me by steth, I am in for embrace! 133

With glow-worm-swarm I flit
To eye Joran, his pupils lit! 134

Sempiternal things I abide in;
Me Time shall gestate within! 135

Joran! Hark! I am the root of aeons! I don't fuss
Not on their edge but midmost nucleus! 136

More flowers to open, more fruits to hang!
More ever to increase and joy with a bang! 137

When I take leave, Joran gives a robe *per se*
That puts in shade none of me! 138

மழையில் இருப்பேன் மலரில் இருப்பேன்
அழைத்தால் அணைப்பேனே வந்து. 133

மின்மினிகள் கூட்டத்தில் மேவிவந்து யோராஉன்
கண்மணிகள் காண்பேன் களித்து. 134

இருப்பேன் இறவாப் பொருள்களில் காலம்
தரிக்கும் எனக்குள்தன் னை. 135

யோரனே! கேள்!நான் யுகங்களின் மூலமடா
ஓரமல்ல நட்டநடு வுள். 136

இன்னும் மலர்பூக்கும் இன்னும் கனிகுலுங்கும்
இன்னும் இருப்போம் இனிது. 137

விடைபெறும் வேளை எதையும் மறைக்கா
உடைகிடைத்தால் யோரா உதவு. 138

Time in cyesis mine twirled and whirled
To fade as a fable past the world! 139

Kavin, Joran, come on! In decads of Tamil flooding chaste
Let us do askesis of thirst culturing taste! 140

Golden syllable-pollen on the flooring!
Why a visa for a bee to hive in?? 141

Pirappu and kaasu are liquids, live and kicking, spilling honey!
Meter the measures sweet and allay! 142

'Theemaa' 'pulimaa'-gay stress and lilt
Like trochee or anapaest for Joran's tilt! 143

Muthamizh[30], Vikram, Tirukkumaran and Inian
Are mates proper to Joran! 144

காலமென்றன் கர்ப்பத்தில் வந்து கரைந்தகதை
ஞாலம் கடந்த கதை. 139

வாகவின்!வா யோரா! தமிழ்ப்பதிக வெள்ளத்தில்
தாகம் வளர்ப்போம்! தவம். 140

தண்டளைப் பொன்பொடிகள் எங்கும் தரைவிரிப்பில்
வண்டுக்கு வேண்டாம் விசா. 141

ததும்பும் பிறப்புநாள் காசுமலர்த் தேன்நீ
மிதமிஞ்சா மல்பார்த்துக் கொள். 142

தேமா புளிமாக்கொண் டாட்டம் தெருவெல்லாம்
ஆமாம்யோ ராஉன்னால் தான். 143

முத்தமிழ், விக்ரம், திருக்கும ரன்,இனியன்[16],
ஒத்தவர்கள் யோரன் உனக்கு. 144

Tarun+Karthi+Sreya+Deepak+..........+n+,,,,
A series without end! 145

Bharathi, Sriram, Rujeela and Asvitha, happily
Chosen weal of kinship, shapely! 146

O, Parents, Why shy from godly Tamil name?
For other tongues, are you game? 147

Gold? "Mary's Rose"? or pixie pansy? How would I word
The sheer joy, in Tamil when named and heard?? 148

Joran's Ma's Ma's Father Land is
Norway, tongue Nordic. 149

The plowman on glebe is Joran by name, aye,
So named is our hero precious in our eye. 150

தருணோடு கார்த்தி சிரேயாதீ பக்[17]காம்
வரிசை வரம்பில்லா மல். 145

பாரதி ஸ்ரீராம் ருகூலா அசிவிதா[18]
தேர்ந்தெடுத்த சுற்றத் திரு. 146

நல்ல தமிழ்ப்பெயர் நாடாத பெற்றோரே!
வெல்லமோ வேற்றுமொழி கள்? 147

பொன்னென்பேன் பூவென்பேன் பேர்தமிழில் சூட்டிவிட்டால்
என்னென்பேன் இன்பமென் பேன்! 148

யோரனின் அன்னையர்க்கும் அன்னையர் வாழ்ந்தமண்
நார்வே; மொழி,நார்வீ யம். 149

மண்ணில் உழைப்பவன்பேர் யோரன்! மருவியநம்
கண்மணிக்கும் அந்தப் பெயர். 150

Father, His Elder, names of theirs
Missing none, Bharathi too in verse! 151

Joran, named with Vel and Jagadeesan, for once!
A deed well done-Benisons! 152

Besides, minas, koels, parakeets,fawns, harts
Peafowls, glow worms, young rabbits of sorts! 153

Bees, drones, beetles tuskers mice and any,
Crabs, fish and rodents many, 154

Langurs, ligers, lions and such
Relations galore you have overmuch. 155

One honey tidal sea, One sky to feather
Sing, wing, and gull in noontide weather! 156



அப்பா பெரியப்பா ஆகியோர் பேர்களையும்
தப்பாமல் பாரதி சேர்த்து. 151

யோரன்வேல் சேர்ந்த செகதீசன் பேரிட்டான்
சீர்த்திமிக்க நல்ல செயல். 152

இன்னும்மை னாக்கள், குயில்கிளிகள், மான்மயில்கள்
மின்மினிகள் சிட்டுமுயல் கள். 153

வண்டுகள் தும்பிகள் யானை முயல்எலிகள்
நண்டுகள் மீன்கள் நனி. 154

குரங்குகள் வேங்கைகள் சிங்கங்கள் என்றே
உறவுனக்காய் ஏராளம் உண்டு. 155

ஒருகடல் தேனலைகள், பாடிப் பறக்கும்
ஒருவானப் புள்ளினங் கள். 156

A conference great for perennials-You are but
A *lux oritur* of millions lit! 157

A tulip to please in frolic sheer,
Joran's face is makizham dear! 158

Hug after hug Baby Tamil
Turns poesy to Joran's thrill. 159

Me in Joran's arms to see
Garden roses blush envy! 160

Frowns first, smiles then, in my hold
Tight he likes, his trait is bold! 161

Ma and Pa, never he'd spare
Never Joran, even for a stare! 162



வாடா மலர்களின் மாநாடு! நீங்கள்தான்
கோடிவிளக் கின்கொண்டாட் டம். 157

மகிழ மகிழ மகிழ மலரும்
மகிழம்பூ யோரன் முகம். 158

தழுவத் தழுவத் தமிழின் கவிதை
குழந்தையாம் யோரன் சுகம். 159

தொடுகிறது யோரன்கை என்னைப் பொறாமைப்
படுகிறது பூக்குலம் பார்த்து. 160

சிணுங்குவதும் பின்னர்ச் சிரிப்பதுவும் தூக்க
இணங்குவதும் யோரன் குணம். 161

அம்மாவை அப்பாவைச் சற்றேனும் யோரனா
சும்மா இருக்கவிடு வான்? 162

From upon my shoulders, Joran to his pal:
Grandpa is not my-tall! 163

No soccer in staying sluggish-hip hip
Hooray is Joran's tip 164

Read and quote? No. Joran would choose
To bite gigabyte and spout his views! 165

Not just a flower-shrub! The flora turn apace
Into smiles by Joran's grace! 166

Far from Joran's nail-crescent! O, Moon,
Wax further round to a perilune! 167

Do you know why sun is up in perigee?
Fear to near Joran free! 168



தன்னுயரம் தாத்தாவுக் கில்லையென்றான் ஏறியே
என்தோளில் நின்றயோ ரன். 163

சும்மா இருப்பதிலே இல்லை சுகமென்று
கும்மாளம்! யோரன் குணம். 164

படிச்சுத்தான் சொல்லணுமா? ஏடுகளை யோரன்
கடிச்சுச்சொல் கின்றான் கருத்து. 165

பூக்கிறது மட்டுமா? பூக்குலம் புன்னகை
ஆக்குவதும் யோரன் அருள். 166

யோரன் விரல்நகம் போலொளிர வல்லையேல்
தேர்ந்தனை வாழி மதி. 167

எட்டா உயரத்திற் கேன்போனான் சூரியன்?
கிட்டவர யோரன் பயம்! 168

When Joran touches me, in Florida I rise
When not, in my bed, desert sighs! 169

A doll in his doll-world is he, but, can I
Turn Not-Ito scan his doll-of-way? 170

All flowers are fake Joran's word of mouth
Is flower in troth! 171

His Eyes are schools; there, learners flower-show!
See, Believe, in the Art of Life, you know. 172

Right now grandson is in my hand
So is this Universe, in grasp, preplanned! 173

Me, full of years cannot run,
How then, I chase Joran?? 174



தொடும்போதில் என்உடம்பில் பூந்தோட்டம்! தொட்டு
விடும்போதில் பாலை வெதுப்பு. 169

பொம்மை உலகிலோர் பொம்மையிவன் நானுமோர்
பொம்மையா வேனா புரிந்து? 170

எல்லா மலரும் மலரல்ல யோரன்வாய்ச்
சொல்லாம் மலரே மலர். 171

கண்களிலே கல்லூரி! மாணாக்கப் பூக்கூட்டம்
கண்டுகற்கும் வாழ்க்கைக் கலை. 172

இப்போதென் கையிலென் பேரன் இனிதான
இப்போதென் கையில்ஞா லம். 173

ஓட முடியா வயதில்நான்; யோரன்பின்
ஓட முடிகிறதே! ஓ! 174

With Kavin too I dash! Anniversaries in a spell
Roll to vanish, but where?, Tell. 175

Can Doll-Organ charm Joran ever?
Daily, chuckle and chide of Ma, he is in clover! 176

A Viswa Bharathi for my sake, out and out,
Is Joran's Advent, a boon, no doubt! 177

Awake or asleep, lesson after lesson in reading
Spent; days leap and fly speeding! 178

Books none, tests none, base blues of memorizing none!
Versatile' Varsity is Joran! 179

Lecture-program is honey- LISP! Demo is small smile!
High tea of learning without hate and guile! 180

ஓடுகிறேன் நான்கவி னோடு வயதுகளும்
ஓடி மறைவதெங்கே ஓது. 175

பொம்மையிசை யோரனுக்குப் போதுமா? அன்றாடம்
அம்மையிசை தேவையா மாம். 176

சொந்தத்தில் பல்கலை ஒன்றெனக் கொன்றேதான்
இந்தநாள் இவ்யோர னால். 177

உறங்கினால் பாடம் விழித்தால் பாடம்
பறக்குமே நாள்கள் படித்து. 178

நூலில்லை தேர்வில்லை நெட்டுருத் தொல்லையில்லை
மேலான பல்கலையோ ரன். 179

விரிவுரை தேன்மழலை! செய்முறைதான் நாளும்
புரிகின்ற புன்சிரிப் பே. 180

**A visit to Como woods-A wordless experience**

Goldfish of Earth is Joran; by his love drawn
Are golden Fomalhaut -crowd to spawn! 181

Sprouts and climbers creep and grow;
Joran's tip-toe touch tickles, you know! 182

Hold tonight a meet do the flower-bands
To read his perennial palmate-hands! 183

Dean is Joran of Como whole
Truly! Can any deny his sylvan role? 184

Betel, neem, cane of Tamil-delta meads
Are slam and win of top seeds! 185

Roses in thousands lament in fear
Of losing merit when Joran is near! 186

## கோமோ வனம்[19] கண்டு வந்த அனுபவம்

தரைத்தங்க மீன்யோரன், தன்னாசை நீரில்
விரைதங்க மீனின் இனம். 181

என்ன வளர்ச்சி செடிகொடிகள் யோரனின்
சின்னக்கை பட்டுச் சிலிர்த்து! 182

கோடிமலர் இன்றிரவு கூட்டம் நடத்துமிவன்
வாடா மலர்க்கை குறித்து. 183

கோமோ வனத்தின் குருநாதன் எம்யோரன்!
ஆமாம்! மறுப்பவர் யார்? 184

வெற்றிலை வேம்பு கரும்பு தமிழ்நிலத்து
வெற்றிக்கிம் மண்ணிலே வித்து. 185

ஆயிரம் ரோஜாக்கள் தம்மதிப்பு யோரனால்
போய்விடுமோ என்றுபுலம் பல். 186

Whenever Japanese bonsai jump to sky,
Mumbles Joran: 'Here am I'. 187

Joran-as-poesy is in the hunkers of a leapfrog!
Nature watches in its jog! 188

Lush green Como! Why no ornithic flutters?
A query to pitch on, my heart mutters! 189

In a cage acorns grow! When would cage bars open
For birds they browse to nest, When?? 190

Joran's word uncaught in spider-web
Speaks in mirth to a flower-club! 191

O, Bees! What for your tunes of drone and clamber?
Flower-plants are pent in glass chamber. 192

வாமன யப்பான் மரமுயர்ந்து வான்தொட
நாமுள்ளோம் என்றான்யோ ரன். 187

தவளையில் யோரன் கவிதைவந்து தத்தக்
கவனித்துப் பார்க்குமியற் கை. 188

பச்சைவனம் ஆனால் பறவையினம் ஏனில்லை
நிச்சயிக்கும் கேள்வியைஎன் நெஞ்சு. 189

கூண்டில் மரம்வளர்த்தார்! கூண்டெல்லை என்றைக்குத்
தாண்டும் பறவைகளைக் கண்டு? 190

சிலந்தி வலைக்குள்ளே சிக்காயோ ரன்சொல்
மலர்களிடம் பேசும் மகிழ்ந்து. 191

மெட்டமைத் தென்னபயன் வண்டுகளே! கண்ணாடிப்
பொட்டலத்துள் பூஞ்செடி கள். 192

This be although, like the wood of Como
Till date we haven't designed one, Why so?? 193

Of all world flora, the long and short
Is this arbor-edition: from myrtle to wort! 194

Benign boons are plants, but if they otherwise will,
Earth will turn a dais of death! Doubt still?? 195

Why Man is estranged in much ado!
Grieves Nature in a state of woe! 196

Gnostics gathered on the peak of green!
The soulful 'ach' of askesis on scene! 197

Have any antique verdure wear? O, Trees,
Give us them all please! 198

என்றாலும் கோமோ வனம்போல ஒன்றைநாம்
இன்றுவரை செய்யலையே ஏன்? 193

இருக்கும் உலகத்துத் தாவர வர்க்கச்
சுருக்கப் பதிப்பிது தான். 194

தாவரங்கள் மாவரங்கள் தாம்நினைத்தால் பூவுலகே
சாவரங்கம்! சந்தேக மா? 195

இயற்கையாய் ஏனில்லை இம்மனிதன் என்றே
இயற்கைக்குத் துன்ப இருப்பு. 196

பச்சைநிறத் தில்ஞானி கள்கூட்டம்! உச்சிவரை
அச்சச்சோ ஆன்மத் தவம். 197

உம்மிடம் பச்சையுடை உண்டா பழையதாய்?
எம்மிடம் தந்தாலேற் போம். 198

For gum-less roots of yours, do you
Have any to put on, tell? 199

Whither can the Gnostics fly to home-come !
Askesis swells to grace welcome! 200

In slide and glide of creepers, a wedge
Of a wind does a course with an edge! 201

Merge in Como; bore wakefulness;
Rise into the beryl of foetus! 202

**At Afton Orchard of Apples**

Downtown from Minneso,
A to and fro in a canto! 203

Afton-Orchard -Apple to pick
A call came; we rushed quick! 204



உடையற்ற வேருக்குள் நீங்கள் உடுக்க
உடையிருந்த துண்டா?சொல் வீர்! 199

எங்குப்போய் ஞானிகள் இங்குத் திரும்பினர்?
பொங்கும் தவத்தின் பொலிவு. 200

செடிகொடிகள் சிற்றசைவில் காற்றுப் படித்து
முடித்ததுவோ கல்வி முடிவு? 201

கோமோவில் ஆழ்ந்து விழிப்பைக் குடையுங்கால்
நாமாவோம் பச்சைக் கரு. 202

## ஆப்டன் ஆப்பிள் காட்டில்[20]

மீண்டும் நகர்தாண்டி மின்னியா வில்புதுக்
காண்டமொன்று கற்ற கதை. 203

ஆப்டன் பழக்காட்டில் ஆப்பிள் பழம்கொய்யக்
கூப்பிட்டார் யாங்கள்போ னோம். 204

A smile cute to crush a million!
Of our smart littlun! An Excursion! 205

Pink, plump, pear-oblong
Cool hanging fruits in throng! 206

Coral many from short trees beckon!
And ravish! Can't help halting to reckon! 207

Orchard trees of emerald green!
Lust for life ablaze, I mean! 208

Do Sun-dwarfs Fall-put-out
Make an orchard in and out? 209

Pick any count any can, no fee!
No charge, have a go over hay 210

குட்டிச் சிரிப்பொன்றால் கோடியாப் பிள்பிழியும்
சுட்டியால் சுற்றுலா வாய்ப்பு. 205

மிளிர்ந்து திரண்டு பருத்து விடைத்துக்
குளிர்ந்து குலுங்கும் கனி. 206

செம்பவள ஆப்பிள்கள் சின்ன மரங்களிலும்
நம்மனம்சும் மாவிடு மா? 207

பச்சை மரகத ஆப்பிள்கள் பார்த்தாலே
இச்சைக்குள் ஏறுமே தீ. 208

சூடு குறைந்தபல் சூரியப் பந்துகளே
காடு முழுக்கக் கனி. 209

எவரும் பழங்களைக் கொய்யலாம்! காசா?
எவர்கேட்பார்? இல்லை.போங் கள். 210

Sky's mercy! No levy on rain really!
That pours for us to live freely! 211

The air we breathe is fully free!
For that, do any fix a fee? 212

Shine not for sale! Sun's kiss!
Sheer charity! Why miss? 213

The fruit of Mutter Nature!, How now
She hugs all kids in bosom love! 214

A few apples Joran picked; his eyes set
On some which we picked! 215

Guava, Mango carnival, won't we too, you know,
Yearly hold and put up a show? 216

மழைதரும் வானம் பணவசூல் உண்டா?
பிழைக்கநாம் பெய்யும்சும் மா. 211

மூச்சுவிடும் காற்று முழுதும் இலவசம்
பேச்சுண்டா காசுபற்றி? பேசு. 212

வெயிலுக்கும் சூரியன் என்னவிலை வைத்தான்
தயவுதான் வேறென்ன சொல். 213

குழந்தைகளை வாரி அணைத்தள்ளிக் கொஞ்சும்
பழந்தாய் இயற்கைப் பரிவு. 214

யோரனே கொஞ்சம் பறித்தான்யோ ரன்கண்ணின்
தேர்வுக்கு யாமும்கொய் தோம். 215

கொய்யாத் திருவிழா மாங்கனி கொய்விழா
செய்யமாட் டோமாஓர் நாள்? 216

Winter's nip to end a lay on
The fruit-season, her final pro and con! 217

In eyes glinting therein to pick and throw
Apples, Joran's flowered a show! 218

Unlike lessons sour, fruits savor!
Why shy, feel their flavor! 219

Among kindergarten-kids, every fruit on edge
Shall mix with their might of knowledge! 220

The greenwood trees with stubs are kind;
They never hurt the kids, gentle masters! 221

A tree, a mere tree in that wood!
Each a teacher of total good! 222

பனிக்காலம் இங்குவந்து பாட்டை முடக்கும்
கனிக்கால ஈற்றுக் கடை. 217

ஆப்பிள் பழங்கொய்ய அங்கிருந்தோர் பார்வையில்
பூப்பூவாய்ப் பூத்தான்யோ ரன். 218

கசக்காத பாடங்கள் இங்குக் கனிகள்
பிசகென்ன வந்துவிடும் பின்பு. 219

பள்ளிக் குழந்தைகளுள் ஒவ்வோர் பழமும்போய்
அள்ளி வழங்கும் அறிவு. 220

குச்சியிருந் தாலும் துயரம் கொடுக்காத
பச்சையா சான்கள் பலர். 221

தருவா? வெறும்தருவா? அந்த வனத்தில்
குருவாம் மரமே குரு. 222

Munched to one's love, love does cloy!
And sends roots to munch more in joy! 223

Apple-picking Lent in Minneso!
Thanks to Afton, *atem wende* fruit-trove! 224

In noiseless poise dawns daybreak!
As a fresh page of a book is in the make! 225

Why do classics open many a window?
To jostle in kiddies world aglow?? 226

Is it all to flick my specs, as wont,
That you court a smile in my front? 227

Why slink in fervor to the side of Ma's Ma ?
To flick her ear stud? What for? 228

தின்றவரை ஆசையைத் தீர்த்துவைக்கும்; ஆசையோ
தின்னென்று வேர்வைக்கும் காடு 223

ஆப்பிள்கொய் நோன்பாலே ஆட்கொண்ட மின்னியா
ஆப்படனே நன்றி அதற்கு. 224

சத்தமின்றிச் சாத்தியம் ஒவ்வோர் விடியலும்
புத்தகப்பு துப்பக்கப் பூப்பு. 225

இலக்கியங்கள் சாளரங்கள் ஏன்திறக்கும்? சேயர்
உலகருளும் இன்பம் உவந்து. 226

முன்னாடி வந்து முறுவலிப்ப தெல்லாமென்
கண்ணாடி கைப்பற்ற வா? 227

அம்மம்மா பக்கம்போய் ஆசை நெருக்கமேன்
கம்மல் கழற்றவா சொல். 228

A Moon in the hand, a dream dear
However are no match for a child near! 229

Dream I altered, tired eye and lid,
Joran disclosed the real, smiles amid! 230

A freckle of a shade, a streak of shine, I made.
But Joran, a heart of love-pour! Onyx and Jade! 231

A tale to tell, a lay to hum and lure
The fair child in your hug for sure! 232

Season-drizzle in Kutralam?Or Spring showers' treat?
Or lapsus linguae lapsuscalami? 233

Lisp of Joran I sought for indeed!
None heeded my need! 234



ஒருநிலவின் சொந்தம், ஒருகனவின் சொந்தம்
ஒருகுழந்தை சொந்தமொப் போ? 229

கனவை மொழிபெயர்த்தேன் கண்ணயர்ந்தேன் யோரன்
நனவைத் திறந்தான் நகைத்து. 230

நிழல்கொஞ்சம் கொஞ்சமொளி நான்படைத்தேன்! யோரன்
மழைகொஞ்சும் நெஞ்சுபடைத் தான். 231

சின்ன கதையிருந்தால் சின்ன கவியிருந்தால்
அன்புக் குழந்தை அணைப்பு. 232

குற்றாலச் சாரலா? கோடைமழைத் தூறலா?
முற்றா மொழிமீற லா? 233

யோரன் மழலை!நான் யோசித்தேன்! யாசித்தேன்!
யாரிடமும் இல்லை விடை. 234

'Experience is Question; Answer, Sense'
Lisped Joran: Feel the innocence! 235

In the hearts of world-kids, may dawn a day
To break ahead! Suffice it be! 236

Light in light lairs to hide, Which
Lumen let me know its hitch? 237

Shades in shade are born fine!
Which of such may teach me mine? 238

If shades are self-lit won't the globe glow bright?
Sky-owner-Sun's say is Sky straight! 239

Prosody-flower by none guessed
is in root's vein seminal numinous! 240

அனுபவமே கேள்வி அனுபவமே மாற்றாம்
அனுபவி என்றான்யோ ரன். 235

உலகக் குழந்தைகள் உள்ளத்தில் ஓர்நாள்
புலர்பொழுதா னால்போது மே! 236

தன்னொளியில் தான்மறையும் தத்துவத்தை எந்தஒளி
என்பால் உணர்த்தக்கூ டும். 237

தன்நிழலில் தான்பிறக்கும் தத்துவத்தை எந்தநிழல்
என்நிழற்குச் சொல்ல வரும்? 238

தானொளிர்ந்தால் வையகமும் தானாய் ஒளிராதா?
வானத்துச் சூரியன்சொல் வான். 239

யாரும் படிக்காத யாப்புமலர் எத்தனையோ
வேருக்குள் வித்தக விந்து. 240

Short of smiles? Famine struck?
Send SOS to Joran with a pluck! 241

Know ye not the raw-root of happy smile?
It is Heart without vile! 242

A hundred stars vacate the sky
And are bound for him! 243

No lip-service! His smiles are
Manifest Art of Heart! 244

Why not try a giggle to your nature?
Trial costs nothing! 245

Some don't laugh; don't let others too!
Inly heart-burns they blow! 246

யாதானும் நாட்டில் சிரிப்புக்குப் பஞ்சமெனில்
தூதனுப்ப லாம்யோர னுக்கு. 241

சிரிப்புக்கு மூலம்தான் யாதெனின் வஞ்சம்
தெரியாத நெஞ்சென்றே தேர். 242

நூறுநட் சத்திரங்கள் வானைத் துறந்துவரும்
யோரன் சிரிப்பையே நோற்று. 243

உதடுசெய்யும் வேலையா? இல்லைசிரிப் பென்றால்
இதயக் கலைவெளிப் பாடு. 244

சிரிச்சுத்தான் பாரும் இயற்கையாய்! என்ன
குறைச்சலிங்கே வந்து விடும்? 245

சிரித்திட மாட்டாய் சிரிக்கவிட மாட்டாய்
எரிச்சலை ஏற்படுத்து வாய். 246

What a cut-piece of a rag is Man! Loathe!
What's wrong in loathing so? 247

Kilos of sugar is bitter gourd -
A kid's small smile showed. 248

So much light solar limited??
Isn't it Joran's gift? 249

What's this life? No laughter in!
Get lost to un-sin sin! 250

Move with the kids, moving
A kid you turn, self-saving! 251

No woe, no loss, unwithering life's ease
But for joy what it is? 252

என்ன மனிதன் இவனென்று கேட்டுவிட்டால்
என்னகுற்றம்? சொல்லு பதில்? 247

ஒருகிலோ சர்க்கரை ஒன்றுமே இல்லை
சிறுகுழந்தை புன்சிரிப்பின் முன். 248

இந்தஒளி எப்படிச் சூரியனுக் கெல்லாமே
சொந்தமா? யோரன் கொடை! 249

சிரிக்கவிடா வாழ்க்கைஎன்ன வாழ்க்கை அதுதான்
இருத்தலின் இல்லாமை நன்று. 250

குழந்தையுடன் நாமும் பழகிப் பழகிக்
குழந்தையாய் மாறிவிடு வோம். 251

துன்பமில்லை தோல்வியில்லை வாட்டமில்லை வாழ்க்கையில்
இன்பமின்றி வேறில்லை யே. 252

Would Dark unlatch the doors?
Or light latch them back-Tell. 253

Doors open and close go broken
For kids' world in ken! 254

**Farewell Fare: Gowpenful of Offerings**

In the Wain of Seven three may abide!
Can a yaazh[31] in a casket hide? 255

In the beat cordial of notes Seven evenly
Life-beat shall live, Music Heavenly! 256

Yaazh-like and its strum in force
May we be amid the world sans remorse! 257

Lamps gala life! No room
for survey-numbering gloom! 258

கதவை இருட்டா திறக்கும்? வெளிச்சம்
கதவை அடைக்குமோ? சொல். 253

அடைப்பும் திறப்பும் நிகழ்த்தும் கதவை
உடைத்ததுகு ழந்தை உலகு. 254

## கைகுவிக்கும் விடையளிப்பு

ஏழுக்குள் வாழ்ந்திட மூன்று விரும்பலாம்
பேழைக்குள் வாழுமோ யாழ்? 255

ஏழிசை நெஞ்சத் துடிப்பே உயிர்த்துடிப்பு
வாழுமது வாழுமிசை யோடு. 256

யாழைப்போல் யாழின் இசையைப்போல் ஞாலத்தில்
வாழ்வோம் வருத்தமில்லா மல். 257

விளக்குகள் கொண்டாட்டம் வாழ்க்கை! இருட்டின்
அளப்புக்கா அங்கே இடம்? 258

In garish gay night of words
We fit in as Fitts of verse!! 259

In Buddha's silence spread are we sans care
Undressing the sound-sac of wear! 260

Acupressure the nerve of telling, go tongue tied;
Some reprieve!. What then? Probe the prosodic aside. 261

Tamil carnival dais in southerly dank!
For curtain rising, come Sasank[32]! 262

Bommulu[33] with a plate of betel et.al comes as told.
A sprig of thanks to offer you gently hold! 263

Commonweal is the promise of Kural
Swear to abide by its weal! 264

Read holy Kural to learn Kural holy!
For to know it wholly is wholesome Grace 265

வார்த்தைகள் கொண்டாடும் வண்ண விழாவிலே
ஆர்க்கும் கவிதையடா நாம்! 259

பவுத்த மனத்துள் படர்கின்ற நாமே
அவிழ்த்தெறிவோம் ஓசை உடுப்பு. 260

செப்பல் நரம்பு சிறிதோய்வு காணட்டும்
அப்புறம் பார்ப்போம் அடுத்து. 261

தென்றல் தமிழ்விழா மேடைத் திரையிழுக்க
மன்றில் சசாங்கனே[21] வா. 262

தாம்பூலத் தட்டோடு பொம்முலு[22] வா! நன்றிமலர்
காம்போடு நீட்டு கனிந்து. 263

திருவினுள் எல்லாம் திருவாம் குறளின்
கருவினுள் வாழக் கருது. 264

திருக்குறள் கற்கத் திருக்குறள் கற்கத்
திருக்குறள் கற்கத் திரு. 265

● ●

## Notes

| | |
|---|---|
| 1. | Valluvar - name of a Tamil poet who wrote the immortal didactic literature Thirukkural. |
| 2. | Theemaa and Pulimaa – components of traditional Tamil verse which form the foot. |
| 3 to 7. | Tamil verse forms |
| 8. | name of a river |
| 9. | an eminent vocalist |
| 10. | a famous dance artist |
| 11. | Sivaji Ganesan, a brilliant cine artist |
| 12. | name of a river |
| 13. | name of a renowned boxer of yester years |
| 14. | name of an ancient and prominent Tamil grammar |
| 15. | name of a grammar of later period |
| 16-17. | names of earlier Tamil epics. |
| 18. | name of a very influential modern Tamil poet. |
| 19. | Bard - Bharathidasan-a very influential modern Tamil poet. |
| 20. | author of Kambaramayanam, a popular Tamil epic of medieval period. |
| 21. | author of Nalavenpa, a Tamil epic. |
| 22. | revolutionary social reformist of Tamil Nadu. |
| 23. | Verses 89 to 99 mention names of popular food items of the Tamils. |
| 24. | Joren's father |
| 25. | Joren's mother |
| 26. | Kavin is the son of Pablo Neruda, the elder brother of Bharathidasan, Joren's father. |
| 27. | name of a character in the cartoon movies for children |
| 28. | Hart, George Hart, Tamil Professor, Berkley University, California, USA. |
| 29 | name of an ancient Sangam poet |
| 30. | Verses 144 to 148 mention some names of the children in the circle of the poet Tamilanban. |
| 31 and 32. | names of the children in the circle of the poet Tamilanban. |

## அடிக்குறிப்புகள்

1. இசபெல் – யோரன் வீட்டு வளர்ப்பு நாய்
2. இசைமேதை பாலமுரளிகிருஷ்ணா
3. நாட்டியக்கலைஞர் பத்மாசுப்பிரமணியம்
4. கப்பலோட்டிய தமிழன் படத்தில் இடம்பெற்ற பாரதியார் பாடல்
5. நடிகர்திலகம் சிவாஜிகணேசன்
6. அறிவியல் மேதை அய்ன்சுடீன்
7. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஆப்ரகாம்லிங்கன் கெட்டிஸ்பர்க் என்னும் இடத்தில் நிகழ்த்திய புகழ்பெற்ற பேச்சு
8. உலகப்புகழ் பெற்ற குத்துச் சண்டை வீரர்
9. வால்ட் விட்மன்
10. குழந்தைகள் உலகக் கதாநாயகன்
11. சூப்பர்மேன்
12. ஸ்பைடர்மேன்
13. குழந்தைகள் கதைப் படப்பாத்திரம்
14. கலிபோர்னியாவில் உள்ள பல்கலைக்கழகம்
15. பருக்கிலியில் பணியாற்றும் தமிழ்ப்பேராசிரியர் ஜார்ஜ்ஹார்ட்
16. கவிஞரின் அன்புவட்டத்தைச் சேர்ந்த குழந்தைகள் பெயர்கள்
17. மின்னியாப் பொலிசில் உள்ள 100 ஆண்டுப் பழைமையான பூங்கா
18. ஆப்டன் ஆப்பிள்காடு மின்னியா பொலிசு அருகில் உள்ளது; கனிகொய்யும் விழாநாள்களில் விலையின்றிக் கனி உண்ணலாம்; பறித்துப் பையில்போட்டால் காசு தரவேண்டும்.
19. சசாங்கன்- கவிஞரின் பேரர் முறையினர்
20. பொம்முலு - கவிஞரின் பேரர் முறையினர்

# குறள்வெண்பா முதற்குறிப்பு

●

தமிழ் யாப்பு வரலாற்றிலே
தமிழின் தலைசிறந்த இலக்கியமே
குறள்வெண்பா யாப்பில் அமைந்ததுதான்.
தெய்வப்புலவரின் திருக்குறள்
யாப்புநிலையிலும் முன்னோடிப் படைப்பே.
திருவள்ளுவருக்குப் பிந்தைய
வரலாற்றிலே ஒரு மாபெரும் கவிஞர்
குறள்வெண்பா யாப்பில்
இலக்கியம் படைத்த முயற்சியாக
இப்படைப்புமுயற்சி நிகழ்ந்திருக்கின்றது.
ஆதலினால் வள்ளுவருக்குப் பிந்தைய
வரலாற்றில், குறள்வெண்பா யாப்பிலான
நூல்களின் உலகத்தில்
ஈரோடு தமிழன்பனின் இடம் தனித்தொளிரும்
தகைமைகொண்டு திகழ்கின்றது.

– பேராசிரியர், முனைவர் **ய.மணிகண்டன்**

